24-5

உ

சிவமயம்.

ஸ்ரீ மஹா கணபதியே நம:

# கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம்.

(கடல் - சூரியன்)






இது

எண் வகை விருதாவலியோடு கூடிய

திருப் பூ வணம், வேதாந்த மட ஸ்தாபகர்

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்

இயற்றியது.

மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரசில்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1967. [பைசா 75

## திருப் பூ வணம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றின. அச்சிடப்பட்டன.

| | | |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஞுஷா வசநம் | 2 50 |
| 2 | விசார சாகரம் வசநம் | 2 50 |
| 3 | கதா சரித் சாகரம், கதை வசநம் | 2 25 |
| 4 | ஹரிமீடே, ஹரிதத்வ முக்தாவலி பத உரை | 0 75 |
| 5 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0 50 |
| 6 | நைஷ்க்கர்மிய சித்தி வசநம் | 0 50 |
| 7 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம் | 0 50 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசநம் | 0 50 |
| 9 | பகவத் கீதை 15வது அத்தியாயம், சம்ஸ்கிருதம், தமிழ் பத உரை, தமிழ் பாட்டு, தமிழ் உரை, மூர்க்க சதகம் சம்ஸ்கிருதம் தமிழ் பத உரை, நிர்க்குண அஷ்டோத்தா சத நாமாவளி, சம்ஸ்கிருதம் தமிழ், நாலு சேர்ந்தது | 0 50 |
| 10 | வேதாந்த பரிபாஷை வசநம் 0 44 [வசநம் | 0 25 |
| 11 | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம் | |
| 12 | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் வசநம் | 0 25 |
| 13 | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0 13 |

### உரை நூல்.

| | | |
|---|---|---|
| 14 | நாநா ஜீவ வாதக் கட்டளை, சத்தியார்த்தப் பிரகாசிகை உரை | 2 00 |
| 15 | சீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை | 2 00 |
| 16 | மேற்படி, நக்ஷத்திர விளக்க உரை | 0 50 |
| 17 | சசி வர்ந போதம், பதார்த்த பாஸ்கரன் உரை | 2 00 |
| 18 | மகா ராஜத் துறவு-மநப் பிரசாதினி உரை | 2 00 |
| 19 | பக்தி (வைராக்கிய) சதகப் பத உரை பொழிப் புரை | 1 50 |
| 20 | மேற்படி உரை, உதாரணக் கவி, பக்தி ரச உரை | 1 00 |
| 21 | வைராக்கிய தீபம், பத உரை பொழிப் புரை | 0 50 |
| 22 | மேற்படி உரை, உதாரணக் கவி, சுடர் உரை | 1 00 |
| 23 | சீடாசாரம் பால போதினி உரை | 0 50 |
| 24 | கைவல்ய நவநீதம், தத்துவார்த்த தீபிகை உரை உதாரணக் கவி 233-க்கு, ஆதித்தன் உரை | 2 50 |
| 25 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி, பரிமள தீப உரை | 1 50 |
| 26 | திரு எம் பாவை, திருப் பள்ளி எழுச்சி மணி மாலை, சிறு சுடர் உரை | 0 75 |
| 27 | திரிம் சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி, நுந்தா ஒளி உரை | 0 25 |

# கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம்

(கடல்—சூரியன்)

---

இது
திருக்களர்

1. ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக
சுவாமிகள் அவர்கள் மாணுக்கரும்,
2. பர சமய கோளரியாரும்
(பர சமயபஞ்சாநநரும்),
3. திரி பாஷா பண்டிதமணியும்,
(தமிழ், இந்தி, சம்ஸ்கிருதம் என்னும்
மும்மொழிப் புலமைரத்நமும்,)
4. சத சாஸ்திர கர்த்தரும் (நூறு நூல்
இயற்றியவரும்),
5. உபய பாஷா வேதாந்தப்
பிரவர்த்தகாச்சாரியரும்,
6. மண்டலேசுவரரும்,
7. சதுர்வித சக்த சாகரரும் (பிரசங்கம்,
மொழிபெயர்ப்பு, உரை நடை, கவி என்னும்
நால் வித ஆற்றல் கடல் அனையரும்),
8. திருப்பூவணம், வேதாந்த மட ஸ்தாபகரும்,
ஆகிய அஷ்ட வித விருதாலங்கிருத

*ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்*
அவர்கள் 1961 ஸூ இயற்றியது

இது மதுரை, V. சுப்புராயலு நாயுடு பிரசில்
அச்சிடப்பட்டது.

 1967 ஸூ [விலை நயே பைசே 75

## அட்டவணை.

ஆரம்ப உரை,

1. தரங்கம் சிவ பிரான்.
2. தரங்கம் விஷ்ணு.
3. தரங்கம் பிரஹ்மா.

,, 1வது புத் புதம், கோவி லூர், முக்தி, ராம லிங்க [ஞாந தேசிகர்.
2வது புத் புதம், அருணுசல ஞாந தேசிகர்.
3வது புத் புதம், பழநியப்ப ஞாந தேசிகர்.
4வது புத் புதம், சிதம்பர ஞாந தேசிகர்.
5வது புத் புதம், ராம சாமி ஞாந தேசிகா,
6வது புத் புதம், வீர சேகர ஞாந தேசிகர்.
7வது புத் புதம், அண்ணுமலை ஞாந தேசிகர்.
8வது புத் புதம், மகா தேவ ஞாந தேசிகர்.
9வது புத் புதம், சோம சுந்தர ஞாந தேசிகர்.

4. தரங்கம், நூறு மடங்கள் உண்டாதல்.
5. தரங்கம், சிருஷ்டித்தல்.
6. தரங்கம், ரக்ஷித்தல்
7. தரங்கம், அத்வைதத்தை விருத்தி பண்ணி, தென் ஞடு எங்கும் பூராப் பரப்புதல்,

ஆக 16 பிரிவு, தரங்கம் 7 (அலைகள்) 9 புத்புதம் (குமிழிகள்)

முடி புரை, ஆக 18 பிரிவினை உடையது ஆம்.



## நூன் முகம்.

உலக மாந்தர்கள் அவரோஹணம் ஆகி, ஆரோஹணம் ஆக வேண்டுவது அவசியம். அதற்குச் சாதநம் பிரஹ்ம ஞாநம், அதனை உபதேசிப்பவரை உணர்த்துவது, கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா அகூபாரம் என்னும் நூல் ஆகும்.

அகூபாரம் என்பது கடலுக்கும், சூரியனுக்கும், பெயர் ஆகும். ஏழு தரங்கமு (அலையு)ம், ஒன்பது புத்புதமும் (குமிழியும்) தொடக்க உரை, முடிபுரை, இரண்டும் ஆகப் பதின் எட்டுப் பிரிவினை உடையது இந் நூல் ஆகும். சிவன். விஷ்ணு. பிரஹ்மா மூன்று தரங்கம் ஆகும். ஆறு புத்புதமும், பிரஹ்மா ரூபம் ஆகப் பதார்த்தங்களை உண்டு பண்ணல் ஆகும். 7, 8, 9 மூன்று புத்புதங்களும் விஷ்ணு ரூபம் ஆக இருந்து, பதார்த்தங்களைக் காத்தல் ஆகும். 4வது தரங்கம், நூறு மடங்கள் ஆகும், உண்டு பண்ணலும் ஆகும். 5வது தரங்கம், மாணவர்களைப் பிரஹ்ம வித்து ஆக்கல் ஆகும். 6வது தரங்கம், காத்தல் ஆகும். 7வது தரங்கம், அத்வைதத்தினை எங்கும் விருத்தி பண்ணுதலும், தென்னாடு பூராப் பரப்புதலும் ஆகும். முடிபுரை, ஆக ஏழு தரங்கம், ஒன்பது புத்புதம், ஆரம்ப உரை, முடிபுரை இரண்டு சேர்ந்து, பதினெட்டுப் பிரிவினை உடைய தாம் இந்நூல். இதனை, ஒவ்வொருவரும் வாங்கி அவசியம் படிக்க வேண்டும். அப்போது தான், நூலின் அருமையும். குருவின் பெருமையும், சிஷ்யர்களின் தன்மையும், நன்கு புலப்படும். எல்லாரும் மோக்ஷம் அடைவதற்கு இந் நூல் சிறந்த வழி காட்டியாகும்.

இங்ஙனம்

*காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.*

வேத மொழி பெயர்ப்பு, காசி வாசி, வீர. சிவாநந்த சுவாமிகள், திருக் களர் ஆண்டவர் வசந சரிதத்தில், எழு திய, கோவி லூர் மடம். பரம்பரை விளக்கம்.

## 1. கோவிலூர், ஸ்ரீ முத்திராமலிங்க ஞாந தேசிகர் ஆண்டவர் செயலும், விதேஹ கைவல்யமும்.

வைசிய நகரங்களுள், தாநங்களில் காரையும் குடித்து கீழ்ப்படுத்தியதால் (காரினும் மிகுந்த வள்ளற் றன்மை யால்) காரைக் குடி என வழங்கும் சிறந்த வைசிய நகரத் தில், வைசிய திலக ராகிய, மெய்யப்ப செட்டியார் வள்ளி யம்மையார் என்பவர்பால், தக்ஷிண மூர்த்தி கலை யாய்த் தோன்றிச், சிவ மென விளங்கலால், ஆண்டவன் என்று காரணப் பெயரும் பூண்டு, மற்றும், அம்மையா ரீந்த அரு நீர் கொண்டு, தமது தாக சுரத்தைச் தணித்துக் கொண்ட வரும், தந்தையைச் செவி டாக்கியவரும், தமது குரு மூர்த்தி யாகிய உகந்த லிங்க ஞாந தேசிகருக்குப் பாதம் வருடுங் கால், அவர்கள், ஓர் செய்யுள் சொல்' என ஆஞ்ஞா பிக்க, "உன்னும்முணர் வுக்குணர் வாயெனக் குண்மை தந்தாய், மன்னுஞ்சுரு திப்பொரு ளாய்வழி காட்டிநின் ருய், பின்லுங்குரு வாயடைந் துன்னருள் பேணவைத் தாய், என்னென்றுரைப் பேனின்க ருணையி ருந்தவாறே". என்று பக்தி சதகத் தோத்திரத்தில் உள்ள, 27வது செய்யு ளைக் கூற, அதனைக் கேட்ட தமது ஆசாரியருக்கு, அன்பு மிகுந்து, தழுவி, அன்பு பாராட்டப் பெற்றவரும், தம் மிடம் வந்து கேட்ட பல தெய்வங்கட்கும், ஆலய முதலிய பணி செய்து வந்தவரும், தந் தாய்பாற் குறை கூறிய, கோவி லூர்த் திரு நெல்லை யம்மைக்குக் கர்ப்பக் கிரகம், அர்த்த மண்டபம், மகா மண்டபம், இராஜ கோபுரம், மற்றும்,

அந்த க்ஷேத்திரத்தி லுள்ள, கொற்ற வா ளீசர்க்கும், இராஜ கோபுரம், சித்திப் கல்பாணி, கைலாச நாதர்க்கு ஆலயங் களும் செய்வித்தவரும், அஃதன்றியும், அத் திரு நெல்லை யம்மையாரே கொண்டு வந்து கொடுத்த தேங்காயை யுடைத்துத், தாந் தொடங்கிய கோவிலூர் மடாலயத்தைக் கற் பணி யாக்கி, நிலை நாட்டி, அதற்கு, 'களத் தூர்' என்னும் ஒரு அரிய பெரிய கிராமத்தைத் தேடுவித்தவரும், வைசிய நாடு தழைக்க வந்த வரப் பிரசாதரும், அங்கு, பல வன்பர்களையும்,பல நாடுகளையும்,உய்யும்படி செய்த வரும், அத் தகைய கோவி லூரை யாண்டதால், கோவி லூ ராண் டவர்' என வழங்கப்பட்டவரும் ஆகிய, முத்தி ராம லிங்க ஞான தேசிக ரவர்கள் அந்திய காலத்தில், தமது மாணுக்கர் களுட் சிறந்த துற வாண்டவர்' என்னும் அருணுசல ஞான தேசிகரைத், தமது வேதாந்த மடாலயத்திற் றலைவ ராக்குவித் தருளிச் செய்து, கலியுக ஆதி 4448க்குச் சரி யான, சாலிவாகந சகாப்தம் (1769) பிலவங்க வருஷம் உத்தராயணம், பங்குனி மாதம், 8உ பாநு வாரம், பௌர்ணமை திதி, உத்தர நக்ஷத்திரம், கந்யா லக்கிநம் கூடிய சுப திநத்தில், மத முதலியவைகட் கெட்டாத சிச பத வடிவ, விதேக கைவல்யத்தை யடைந்து சிவ மாயிஞர்கள்.

## 2. அருணுசல ஞாந தேசிக சுவாமிகள் குரு ஸ்தாநத்தினை வகித்தலும், விதேக கைவல்யமும்.

அதன் பின்னர், அத் தகைய சிறப்பு வாய்ந்த கோவி லூ ராண்டவரின் திரு வருளைப் பெற்று, அரிய துறவுக் கோ ராதரவு காட்டி யாண்ட, துற வாண்டவர் என்பவ ரும், வைசிய நகரத்திற் கெல்லாந் தலைமை யாய் விளங்கும்

தேவி கோட்டை என்னும் வைசிய நதரத்தின்கண் தோன்றித், திரண்ட செல்வத் தலைவரா யிருந்து, பின்ன ரவைகளனைத்தையும் நீத்துக், கோவி லூ ராண்டவரைச் சரணடைந்து, பட்டிநத் தடிகள் போல், கோவண வுடையையே யுடை யாகக் கொண்டு, துறவர்கட் கோர் தூமணியா யிருந்து, திரு வெண்காட்டுப் பெரு மெண்குணத்தா னுகிய பரம சிவன். அர்ச்சகர் வடிவ மாய் வந்து, அந்ந மளித் ததை யுண்டு, ஈ றிலாத் தமிழ் மொழிக் கோர் ஆறு சூடியவற்கும். மாறிக் குற்றங் கூறிய, கூ ரெருணுக் கவித் திறமை வாய்ந்த, நற்கீரர் போன்ற, ஆறு முக நாவலர் முதலியவர்களால், வணங்கித் துதித்துப் பாடப் பெற்று வந்திருந்தனர். பின், தமது ஆசிரியரி னுணைப்படி, கோவிலூர் வேதாந்த மடாலயத் தலைமையை யேற்றுக் கொண்டு, அம் மடாலயத்தைப் பல வகையாலும் விருத்தி செய்து, சிட ராசாரங்களேயும், செவ்வனே வகுத்து, நடந்து, நடாத்தியுங், காட்டி யருளித், தமது மடாலயத்தில், வேதாந்த சிரவணஞ் செய்யுஞ் சாதுக்கள் கூட்ட மிகுந்து வரு மாறு. கழநி வாசல் என்னுங் கிராமத்தையும், தமது மடாலயத்திற் கூதிய மாய்த் தேடுவித்துச், சில காலம், அம் மடாலயத்தில் வேதாந்த போதக ஞாநாசாரிய ராய், திருப் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள், சிதம்பர சுவாமிகளை, 'புத்திர பாக்கியம் போதும், பௌத்திர பாக்கியம் பெருகுக' எனக் கூறி, குமார தேவரிடத்தில் அனுப்பியது போல், கேரள தேயத்தில் உள்ள, கோட் டாறு என்னும் ஊரில் பிறந்த, 'நித்தியாநந்த சுவாமிகள்' என்னும் முமுக்ஷு, கோவி லூர் ஆண்டவரைச் சரணுகதி யாக அடைய, அவரை, 'நீ நமது துறவுப் பிள்ளையிடம் போயிருந்து வா' என்று அனுப்பப் பெற்று வந்து, சரணுகதி அடைந்து, வேதாந்த சாஸ்திர

வேத்தா வாய், பிரஹ்ம வித் தாய், காசி முதலிய பல க்ஷேத்
திரம் சென்று, சம்ஸ்கிருத வித்துவா ஞய், சங்கீத ஞானி
யாய், தமிழ் இலக்கண இலக்கிய மர்மஞ்ரு ராய், சம்ஸ்
கிருதத்தில், மும்மடி தேவர் 6000 லகு யோக வாசிட்டத்
திற்கு எழுதிய, 'சம்சார தரணி' என்னும் வியாக்கியாநத்
தினை, தமிழில் மொழி பெயர்த்தல், சதா சிவப் பிரஹ்மேந்
திர சரஸ்வதி அவர்கள், சம்ஸ்கிருதத்தில் செய்த, அத்வைத
ரச மஞ்சரி என்னும் நூலின், மூலமும், உரையும், தமிழில்,
மூலம் செய்யு ளாகவும், உரை வசந மாகவும், மொழி
பெயர்த்தல், வித்யாரண்ய சுவாமிகள், சம்ஸ்கிருதத்தில்
இயற்றிய, பஞ்ச தசியை, தமிழில், செய்யு ளாகப் பத்துப்
பிரகரணம் மொழி பெயர்த்தல், அதே பஞ்ச தசியில், ஏழு
பிரகரணம் வரை, மூலம், சூர்ணிகை யாகவும், ராம
கிருஷ்ண பண்டிதர் வியாக்யாநம், வசந மாகவும், மொழி
பெயர்த்தல், சங்கராசாரிய சுவாமிகள் இயற்றிய, தக்ஷிணு
மூர்த்தி அஷ்டகம், செய்யு ளாக மொழி பெயர்த்தல், முத
லிய பல பரோபகார காரியங்களைச் செய்தவ ராகிய, நித்தியா
நந்த ஸ்வாமிகள். அருணுசல ஞாந தேசிகர் பிள்ளைத் தமிழ்
பாடிய பஞ்ச லக்ஷண வித்வான், சுப்பராய சுவாமிகள், முத
லிய பல சிஷ்ய குழாங்கள் உடையவராயிருந்து, இதம் பல
வாய்ந்த, 'சிதம்பர ஞாந தேசிகர்' என்னும், கருணு நிதி
யவர்களை, அம் மடாலயத்திற்குத் தலைமைய ராக்குவித்து
விட்டு, கலி (4950) சாலிவாகந சகாப்தம் (1771) சௌ
மிய வருடம், தக்ஷிணுயநம், கடக மாதம், பாநு வாரம், ௨௨
இரவு, சதுர்த்தி திதி, கிரீஷ்ம ரிது, சுக்கில பக்ஷம், மிதுந லக்கி
நம், பூச நக்ஷத்திரத்தில், பதாநந்தங் கடந்து நின்ற, நிஜாநந்த
ரூப வடிவ, விதேக கைவல்யத்தை யெய்தினர்.

## 3. சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள் செயலும், விதேஹ கைவல்யமும்

அதன் பின்னர், கோவி லூ ராண்டவரின் குரை கழ லருள் பெற்றவரும், தமது மூத்த சகோதரரு மாகிய, 'ஐயா அவர்கள்' என்னும் மெய்யாந் திரு நாமம் பெற்று வந்த, சிதம்பர ஞாந தேசிக ரவர்கள், துற வாண்டவர் தரிசநத்தால், 'தமக்குந் துறவு வந்தது' என, அவர் திரு வாக்கைச் சிர மேற் கொண்டு, அம் மடாலயத் தலை மையை அன்போடு மேற்றுக் கொண்டு, தமது மேம்பாட் டால், யாவரு மதிக்க இருந்து, தமது ஆசிரியரின் அதிட் டாநத்தைச், சிறந்த கற் பணி யாக்கி, நற் புவி கொண்டாட பற் பல வகையில், அம் மடாலயத்தை விருத்தி செய்து, முத்தி யடைய விரும்பும் எத் திசைப் பக்குவிகட்கும், பரமாந்மாவின் இலக்கணங்களை விருத்தி செய்து, உபதே சித்துக் கொண்டு, குரு மணி யாகிக், குவலயம் போற்ற, இரு நில மதனி, லிரவி யாகி, வேதாந்த மரபின் முறைகளை விதிப்படி வகுத்துப், பாடங் கேட்கு முறை, பாடம் போதிக்கு முறைகளைப், பகுத்துச், சிவ திருப் பணிச் செல் வரா யிருந்து, அந்த க்ஷேத்திரத்தி லுள்ள சோமாஸ்கந்த மூர்த்திக்குக் கருங் கல்லா லிழைத்த நீல மொத்த காந்தி வீசும் ஆலய மொன் ருற்றி, யாளி, யணி வெட்டுக் கால் விமாந மண்டபம் முதலிய திருப் பணியச் செய்து, மற் றும், மது புஷ்கரணி தீர்த்த வணைக் கட்டு, படிக் கட்டுகள், அதன் மைய மண்டபம் முதலியவைகளையுஞ் செய்து, கோவி லூருக் குள்ள, குறிப்பு வாய்ந்த, குறிப்புப் பிளான் தயார் செய்து, திருப் பணிகளின் குறிப் பினங்களை, வகுத் துத், தேவாலய மடாலயங்களைச் சிறப்புடன் பாராட்டிக்

கொண்டு, 11 வருஷம், நேமத்தான் பட்டி "ஐயா அவர்கள்" என்னும் பழநியப்ப சுவாமிகளுடன் கூட இருந்தும், 16 வருஷம் வரை, தாமே வேதாந்த போதக ஞாநாசாரியரா யிருந்து, நெறியாண சமயத்தில், தமது தேகம் வீழும் நிலை கண்டு, பல மாணுக்கர் சூழ இருக்க, அந்த க்ஷேத்திரத்தின் இரண்டாந் திரு விழா வாகிய சுப திநத்தில், தமது மாணுக்க ரான காரைக் குடி, இராம சாமி ஞாந தேசிகரை அம் மடாலயத்திற்குத் தலைமைய ராக்கி விட்டு, கலியாதி 4977 சாலி வாகந சகாப்தம் 1797, தாது வருடம், தக்ஷிணாயநம், கிரீஷ்ம ரிது, ஆடிமீ 4உ, கிருஷ்ண பக்ஷம், ஏகா தசி திதி, சோம வாரம், துலா லக்நம், ரோகிணி நக்ஷத்திரம் கூடிய சிறப்பு வாய்ந்த வத் திநத்தில், அதே யது வாகிய, சுதா மய மென்னும் விதேக கைவல்ய பதத்தை யெய்தினர்.

4. காரைக் குடி, இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகள் செயலும், விதேஹ கைவலயமும்.

அதன் பின்னர், தமை யடைந்தோர்களின் பவத் தைத், தமது சரணுமிர்தத்தால், தொலைக்குங் கருணு நிதி யாகிய, தமது ஞாநாசாரியரின் திரு வாக்கின்படி, இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகள், அம் மடாலயத்தின் தலைமை யைப் பெற்று, வேதாந்த போதகாசிரியரா யிருந்து, அந்த மடாலயத்தில், அடியார்க ளமு துண்ணு மரும் போசநச் சாலை, மண்டபம் செய்தல், முதலிய பல வா ருக விருத்தி செய்து, ஆங் குள்ள தேவாலயத்தில், அஷ்ட லட்சுமி மண்டபம் முதலிய சிவ பணிகள் செய்து, ஏ ழுரை யாண் டிருந்து, தமது நிரியாண தசையில், 'வீரன் வரு வான்' என்னும், அக் கோவி லூரி லுள்ள பெரியார் திரு

வாக்கின்படி, தீர ஞாந சிகாமணியாகிய, வீர மா முநிவரை, இந்திரன் தமது சேனைக்கு முருகப் பெருமானைத் தலைவ ராக்கியது போல், அம் மடாலயத்திற்குத் தலைவ ராக்க வேண்டுங் குறிப்பைக் காட்டி யருளி, கலியாதி (4985) சாலிவாகந சகாப்தம் (1805) சுபாநு வருஷம், மார்கழித் திங்கள், 6உ, புதன் கிழமை, கிருஷ்ண பக்ஷம், சஷ்டி திதி, மக நக்ஷத்திரங் கூடிய, நற் திநத்தில், நித்தியாநந்த வடிவ சத்ய மோக்ஷ மென்னும் விதேக கைவல்ய பதத்தை யெய்தினர்.

5. திருக்களர் ஆண்டவர் வீரசேகர ஞாந தேசிகர்,
6. அண்ணுமலை ஞாந தேசிகர்,
7. மகா தேவ ஞாந தேசிகர்.

கோவி லூர்ப் பரம்பரை முற்றும்.

திருப் பூ வணம்
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சாரய ஸ்வாமிகள்,
திருக் களர், ஆண்டவர், வசந சரிதத்தில
எழுதிய, கோவி லூர்ப் பரம்பரை விளக்கம.

---

## 1. கோவி லூர்ப் பரம்பரை விளக்கம்.

''நல்லாரைக் காண்பதுவும் நன்றே நலமிக்க.
நல்லார்சொற் கேட்பதுவு நன்றே—நல்லார்,
குணங்க ளுரைப்பதுவு நன்றே யவரோ,
டிணங்கிஇ ருப்பதுவு நன்று''

என்று கூறியிருக்கின்றமையின், பெரியாரைக் காண்டல், அவர் சொற் கேட்டல், அவர் குணங் கூறல், அவருடன் சேர்ந் திருத்தல், என்னும் நான்கும், ''மோக்ஷ சாதநம்'' எனக் கருதப்படுகின்றது. ஞாநியின் புகழைக் கூறுவோர்

புண்ணியத்தினை அடைகின்றனர்'' எனக் கூறப்படுதலி னுனும், ''தெரிந்திடின் சற்சீடன் அவன் அருளைத் தேசங் குலவ வளரப்போன்'' எனக் கூறப்படுதலினுனும், குரு வின் பெருமையினை மாணுக்கன் கூற வேண்டுவது அவசி யம் ஆகின்றது. ஆகலின், யாம் இவ் வகூபாரத்தின் முன் சாரமாகச் சிற்சில கூறுவாம்.

கலியுக ஆதி இரண்டாயிரம் வருஷத்திற்குப் பின், சிவ பெருமான் அத்வைத மதத்தினைச் சீர் திருத்தம் செய்வதற் காக, மலையாள தேசத்தில், 'காலடி' என்னும் கிராமத்தில், 'சங்கரர்' என்னும் பெயருடன், கலியுக ஆதி 3058க்குச் சரியான ஈசுவர வருஷம், வைகாசி மாதம், சுக்கில பக்ஷ பஞ்சமியில், அவதரித்து, முப் பத்திரண்டு வருடம், இவ் வுலகில், சஞ்சரித்துத் தாம் செய்யத் தக்க யாவற்றையும் செய்து, தமக்குப் பின், பரம்பரையாக இருந்து நடாத்தி வருவதற்கு, பத்ம பாதாசார்யர், சுரேசுவராசார்யர், தோட காசார்யர், அஸ்தாமலகாசார்யர், என்னும் சிஷ்யர்களை யும், நான்கு திசைக்கும் இருக்குமாறு ஆஞ்ஞாபித்து, அநேக கிரந்தங்களை யியற்றி வைத்துக் கைலாயத்திற் கெழுந் தருளினர்.

அவர்கள் பரம்பரையில், கலியுக ஆதி 4860க்குச் சரி யான வெகுதாந்ய வருஷத்தில், சிக்கல் பொருள் வைத்த சேரியில், நவ வீரர் வம்சத்தில், அவதரித்த. உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள், நீ ணுள், வேதாந்த போதகரா யிருந்து, தமக்குப் பின், பிரஹ்ம வித்தியா பரம்பரையை அநுஷ்டிக்க, வடக்கே, திருவண்ணுமலையில், ஈசாந்ய மடத் தில், கந்தப்ப ஞான தேசிக ஸ்வாமிகளையும். தெற்கே, கோவி லூரில், முக்தி ராம லிங்க ஞான தேசிக ஸ்வாமிகளை

யும், இருக்கு மாறு ஆஞ்ஞாபித்து, கலியாதி 4919க்குச் சரி யான வெகு தாங்ய வருஷம், பங்குனி மாதம், 26ஆம் தேதி, செவ் வாய்க் கிழமை, ஏகா தசி திதி, மக நக்ஷத்திரத் தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

அதன் பின்னர், குரவன் ஆணை பெற்று, வடக்கே திரு வண்ணுமலையில், தியாகபரரா யிருந்து, கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள், கலி ஆதி 4930க்குச் சரியான, விரோதி கிருது வருஷம், மார்கழி மாதம், 26ஆம் தேதி, வியாழக் கிழமை, திரயோதசி திதி, மிருக சீர்ஷ நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

தெற்கே, கோவி லூரில் இருந்த, முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள், காரைக் குடியில், கலி ஆதி 4892க்குச் சரியான, விரோதி கிரு து வருஷத்தில், ஜனித்துத் தமது பதின் மூன் ருவது வயதில், சிக்கல் - பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குரு வாக அடைந்து, தமது பதி னேந்தே முக்கால் (அதா வது இரண்டே முக்கால்) வருஷத்தில் வாசிட்டம் வரைப் பாட சமாப்தி செய்து, தமது 16½ வருஷத்தில், குரு பத்தி நிக்குக் கோவி லூரி லிருந்து, மயிற் குஞ்சுகள் அநுப்பி, தமது 17 வயதில், கோவி லூர்த், திரு நெல்லை யம்பாள், தம் திருப் பணியை முடித்துக் கொள்ளக் காரைக் குடியில், ஆண்டவர் வீட்டுக்கு எழுந்தருளி வந்து, ஆண்டவர் தாயார், வள்ளி யம்மையாருக்குத் தரிசநங் கொடுத்துத், திருப் பணியை முடிக்கச் சொல்லல், தமது 17½ வயதில், கோவி லூர், அம்பாள், திருப் பணிக்குத் திரவி யார்ச்சநம் செய்யத் தேவி கோட்டைக்குச் செல்லல், 19 வயது (அதா

வது 1½ வருஷம்) வரைக் காரைக்குடியில், தம் கிருகத்திலும், திரு வாசல் மடத்திலும், அதளத் தோப்பிலும், வேதாந்த நூல் போதித்தல், பின் தமது 27 வயதில், தமது குரு மூர்த்திகள் பரிபூரணம் அடைதலுக்குச் சென்றிருந்து, குருவின் திருமேனியைச் சமாதி வைத்தல், தமது 28வது வயது முதல், 30வது வயது (அதாவது 2 வருஷம்) வரைக் கோவிலூரில், கோவிலுக்கு மேல் புரம் இருந்து, சில காலம் வேதாந்த பாடம் போதித்தல், சிங்காரத் தோப்புப் போட்டிருக்கிற இடத்தில் இருந்து, சில காலம் வேதாந்த பாடம் போதித்தல், தமது 31 வது வயதில், இப் போ திருக்கிற கல் மண்டப மடம் ஆரம்பிக்க, அதே சமயத்தில், திரு நெல்லை யம்பாள், பிராமணக் கந்நிகை ரூபமாய்த், தேங்காய், வாழைப் பழம், புஷ்பம், வெற்றிலை, பாக்கு, மஞ்சள், முதலிய்வற்றை ஒரு தாம்பாளத்தில் வைத்துக் கொண்டு வந்து, ஆண்டவர் கரத்தில் கொடுக்க, அதனை வாங்கி அம்பாள் அநுக்கிரக மானதால், "இவ் விடத்தில் எப் பொழுதும் மாருத அந்ந தாநம் நடக்க வேண்டும்" என்று சொல்லி, தேங்காயினை உடைத்துத் தச்சுச் செய்தல், தமது 31வது வயது முதல், 56வது வயது (அதாவது 26 வருஷம்)வரைக், கல் மண்டப மடத்தில் இருந்து, வேதாந்த நூற்களையும், ஞாந வாசிட்டத்தினை ஏழு முறையும், பாடம் சொல்லல்,முதலிய அநேக அற்புகத் திரு விளையாடல்களை, 43 வருஷம் செய்து கொண்டு, 'சத்ய சங்கற்பம்', 'ஜகத் துச்சம்' என்பவற்றை, உலகத்தவர்கட்கு பிரத்தியக்ஷ மாக அறிவித்து, கலி ஆதி 4948க்குச் சரியான, பிலவங்க வருஷம், பங்குநி மாதம், 8 தேதி, ஞாயிற்றுக் கிழமை, பௌர்ணமை திதி, உத்திர நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைத்தனர்

2. அதன்பின், 'துற வாண்டவர்' என்னும் அருண சல ஞான தேசிக ஸ்வாமிகள். தேவி கோட்டையில், கலியாதி 4916க்குச் சரியான, யுவ வருஷம், ஜனித்துத் தமது 19வது வயதாகிய, விஜய வருஷத்தில், கோவி லூர் வந்து. முக்தி ராமலிங்க ஞான தேசிக ஸ்வாமிகளைக் குரு வாக அடைந்து, பிரஹ்ம வித் தாய், கௌபீந தாரியாய்த், தமது 32½ வயது (அதாவது 13½ வருஷம்)வரை, பல இடங்களிலும், சஞ்சரித் துக் கொண்டு, திருப் பாதிரிப் புலியூரில் இருந்த, வீர சைவ, முத்துச் சரவண சுவாமிகளிடம், 32000 வாசிட்டம் சிரவ ணித்துக், குரு ஆஞ்ஞையின்படி, கலி 4948க்குச் சரியான, பிலவங்க வருஷம், பங்குனி மாதம், 8௳, ஞாயிற்றுக் கிழமை, கோவி லூர் மடாதிபதி யாகி, தமது 34 வயது வரை, ஒரு வருஷம் நான்கு மாதம் இருந்து, 'சீடாசாரம்' என 50 செய்யுளில், ஒரு நூல் திரட்டியும், கைவல்ய நவ நீதம்' என்னு நூற்குப், 'பத சாரம்' என, ஒரு உரை யியற் றியும்' கலி 4950க்குச் சரி யான, சௌமிய வருஷம், ஆடி மாதம், 9௳, ஞாயிற்றுக் கிழமை, இரவு, சுக்கில பக்ஷ சதுர்த்தி திதி, பூர நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

3. அதன் பின், "நேமத்தான் பட்டி அய்யா" என் றும், "பெரிய அய்யா" என்றும், வழங்கும், பழநி யப்ப சாமிகளும், ("கோட்டையூர் அய்யா" என வழங்கும், அண்ணமலைச் சுவாமிகளும் சேர்ந்து) பதி னொரு வருஷம வரை, கோவி லூர் மடத்தில், வேதாந்த பாடம் இரவில் போதித்துக் கொண்டிருந்து, கலி 4961க்குச் சரி யான, ரௌத்திரி வருஷம், தக்ஷிணாயநம், ஆடி மாதம், 8௳, சனிக் கிழமை, சுக்கில பக்ஷ திரிதியை திதி, மக நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

4. அதன் பின், சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள், ‘தேவி கோட்டை’ என்னும் ஊரில், கலி 4924க்குச் சரியான, சுபாநு வருஷத்தில் ஜநித்து, தமது 14வது வயதாகிய ஹேவிளம்பி வருஷத்தில், கோவிலூரில் தமது தமையனாராகிய ‘துறவாண்டவர்’ என்னும், அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிகளைத் தரிசிக்க வந்த சமயம், முக்திராம் லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து, தமது 26 வது வயதாகிய, சௌமிய(12) வருஷம் வரைக், குருவினிடம் சாத்திரங்களைக் கேட்டுப், போதித்துக் கொண்டு, நிஷ்டாபரரா யிருந்து, துறவாண்டவர் விதேஹ கைவல்யத்தின் பின், தமது குருவின் ஆஞ்ஞைப் படியும், துறவாண்டவர் ஆஞ்ஞைப்படியும், “நேமத் தான்பட்டி அய்யா” என்னும், பழநியப்ப ஸ்வாமிகள், “விதேஹகைவல்யம் வரை” உடன் இருந்து, மடத்துக் காரியங்கள் யாவையும் பார்த்துக் கொண்டு, பகலில் வேதாந்த சாஸ்திரங்களை உபதேசம் செய்து கொண்டு,தமது 37வது வயதாகிய, ரௌத்திரி வருஷம் முதல், தமது 53வது வயதாகிய, தாது வருஷம் (16) வருஷம் வரைத் தாமாகவே, வேதாந்த சாஸ்திரங்களையும், வாசிஷ்டத்தினை ஏழு முறையும், உபதேசஞ் செய்து கொண்டு, சிதம்பரம் மூல ஸ்தாந ஈசுவர கோவிற், கும்பாபிஷேகம், கோவிலூர் ஆண்டவர் கோவிற் கற்றிருப்பணி செய்து‘ கும்பாபிஷேகம், களத்தூர், சிவன் கோவில், கற்றிருப்பணி யாக்கிக், கும்பாபிஷேகம், மதுரை,சொக்க லிங்கம், மீநாக்ஷியம்மன் கோவில்,கும்பாபிஷேகம், சோமஸ்கந்தருக்கு நீல நிறக் கல்லால் கோவில் கட்டல், யாளி மண்டபம், திருக் குளம், மைய மண்டபம் செய்தல், காரைக்குடிக்கும், கோவிலூருக்தும், ரோட்டுப் போட்டு,

இரு மருங்கும் தென்னை விருக்ஷம் வைத்தல், முதலிய நற் கிருத்தயங்கள் பலவற்றை, அநாயாச மாகச் செய்து, கண்டார் கா முறும் வண்ணம், கவி னுறு வாக் குடைமை யாற், 'கருணை நிதி' எனக் காரணப் பெயர் வழங்கப் பெற்று, புருஷ லக்ஷண சிரேஷ்ட ராயப், பிரஹ்மாநந்தா நுபவியாய், யாவரும் வணங்கும்படியா யிருந்து, பிரஹ்ம நாமாவலி (லக்ஷணவிருத்தி) எனச் செய்யுள் ரூப மான, ஒரு நூலும், குரு ஸ்துதி குசுமாஞ்சலி' என ஒரு நூலும், இயற்றி, கலியாதி 4977க்குச் சரி யான, தாது வருஷம், ஆடி மாதம், 4௳, திங்கட் கிழமை, கிருஷ்ண பக்ஷம், ஏகா தசி திதி, ரோஹிணி நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

5. அதன் பின்னர், இராம சாமி ஞாந தேசிக ஸ்வா மிகள், 'காரைக்குடி' என்னும் ஊரில், விளம்பி வருஷத் தில் ஜநித்துத், தமது 16வது வய தாகிய, ஆநந்த வருஷத் தில், சிக்கல், பொருள் வைத்த சேரி, வீரபத்திர சுவாமிகளை குரு வாக அடைந்து, புலமை நூல் கற்றுத், தமது 23வது வய தாகிய, துந்மதி (7) வருஷத்தில், கோவி லூர். சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குரு வாக அடைந்து, வேதாந்த சாஸ்திர வேத்தா வாய், திரு நெல்லை யம்மையை உபா சநா மூர்த்த மாகக் கொண்டவ ராய், திட ஞாநி யாய், அஞ்சா நெஞ்ச ராய் இருந்து, தமது குருவின் விதேக கைவல்யத்தின் பின், தமது 38வது வய தாகிய, தாது வரு ஷம், ஆடி மாதத்தில், கோவி லூர், குரு ஸ்தாநத்தினை வஹித்து, 7 வருஷம் 5 மாதம் வரை, வேதாந்த சாஸ்தி ரோபதேசஞ் செய்து கொண்டு, சாக் கோட்டை, வீரப்ப

ஸ்வாமிகள், காளையார் கோவில், செல்லப்ப சுவாமிகள் முதலிய சிஷ்ய குளாங்களை உடையவராய் இருந்து, ஆண்டவர் கோவில் பிராகாரப் பத்தி மண்டபம், அரும் போசநச் சாலை மண்டபம், கோவிலில், அஷ்ட லக்ஷிமி மண்டபம், முதலியன இயற்றித் தமது 45வது வய தாகிய கலியாதி 4984 சாலிவாகந சகாப்தம் 1805க்குச் சரி யான, சுபாநு வருஷம், தக்ஷிணாயநம், ஏமந்த ரிது, மார்கழி மாதம், 9உ, கிருஷ்ண பக்ஷம், ஷஷ்டி திதி, புத வாரம், மகர லக்நம், மக நக்ஷத்திரத்தில், விதேஹ கைவல்யம் அடைந்தனர்.

6. அதன் பின், புது வயலில் கலி 4949க்குச் சரி யான கீலக வருஷம், ஆவணி மாதம், 12உ, வெள்ளிக் கிழமை, வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள் அவதரித்துத், தமது 16வது வய தாகிய, ரத்தாக்ஷி வருடம். கோவிலூரில், சிதமபர ஞாந தேசிக ஸ்வாமிகளைக் குரு வாக அடைந்து, சாஸ்திராப்யாசம் செய்து, தமது 35 வது வய தாகிய, சுபாநு (19) வருஷம். மார்கழி மாதம், வரை, பல ஸ்தல யாத்திரை செய்து, தியாகபர ராயச், சுகரைப் போன்ற வைராக முடையரா யிருந்து, கோவிலூர், முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகளின் சத்ய வாக்கின் படியும், சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகளின் சத்ய சங்கற் பப்படியும், இராம சாமி ஞாந தேசிக ஸ்வாமிகளின் அந்திா கால சங்கற்பப்படியும், சிதம்பரம், பொன்னம்பல ஞாந தேசிக ஸ்வாமிகளின் விடா முயற்சிப்படியும், சாதுக்களுடைய நீண்ட சங்கற்பப்படியும், சுபாநு வருஷம், மார்கழி மாதம, 6உ, புதன் கிழமை, கோவி லூர், மடாலயத் தலைமை பூண்டு, தமது அறு பத்து இரண்டே முக்கால் வய தாகிய, விரோதி கிருது (27) வருஷம், (5) மாதம், வைகாசி மாதம், 27உ, வெள்ளிக்கிழமை வரை இருந்து, கோவி லூரில், பல ஆலயங்களையும், திருக் களரில், பல ஆலயங்களையும், பணி செய்து, கோவி லூரில், சிவாலய

கும்பாபிஷேகம், ஆண்டவர், கருணுசித்தி ஆலய கும்பாபி ஷேகம், திருக் களரில், கும்பாபிஷேகம், சிக்கல், பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிகர் ஆலய கும்பாபி ஷேகம், களத் தூர், ஆலய கும்பாபிஷேகம், 'ஓலைக் குடி' என்னும் கிராமத்தில், கணேசர் கோவில், மடம், நெற்களஞ்சியம் முதலியவற்றைச் செய்தும், பூ லோகத்தில் உள்ள ஆலயங்கள் எல்லாவற்றிலும் நடக்கும் கும்பாபிஷேகங்களைத் தரிசித் தும், பல க்ஷேத்திரம் சென்று, நான்கு வேத பாட சாலை, அறுபான் மூவர் மடம், பசுச் சாலை, அந்ந சத்திரம், நந்தந வநம், ஆலயப் பணி முதலியவற்றைப் பிற தநவந்த ரைக் கொண்டு, எல்லை யின்றி, எண் ணிலாது செய் வித்தும், மாணுக்கர் பல் லாயிரவர்க்கும், வேதாந்த சாஸ் திர உபதேசம, பிரதி, திநமும் செய்து, ஆறு முறை வாசிட்ட பாடம் உபதேசித்தும், கோவி லூர்த் திரு நெல்லை யம்பாள் ஆலயம் கருங் கல்லால் இயற்றுவதற்குப் பிரித் திருந்து வேலை நடவாது தயங்கும் சமயம், திரு நெல்லை யம்பாள் தியாநத்தில் வந்து, "எடுத்த காரியங்கள் யாவும் நினைப்பின் வண்ணம் தடை யின்றி முடிவு பெறும்; இனி எந்த காரியத்தினையும் ஆரம்பிக்கலாம்" என்று ஆசிர்வதித் தநுக்கிரகித்ததனைப் பெற்றும், நினைத்த வண்ணம் சத் காரியங்கள் யாவும் முட் டின்றி முடித்தும், இன்னும், அற்புதத் திரு விளையாடல் பலவற்றைச் செய்து, யாவரும் பின்னரும் உணரும்படி காட்டியும், கலி 5012க்குச் சரி யான விரோதிகிருது வருஷம், வைகாசி மாதம், 27௳, வெள்ளிக் கிழமை, சுக்ல பக்ஷம், திரயோ தசி திதி, விசாக நக்ஷத்திரத்தில், பகல் 11 மணிக்குத் தெற்கு வீதியில், தேரின் முன் பாகக் கடவுள் எழுந்தருளி யிருக்க, நட ராஜாவின் சந்நிதியில், பிராமணர்களால் தேஹத்தினைத் தாங்கப் பெற்று, "மகா தேவ" என்னும் மந்திர உச்சாரணத்தினோடு, விதேஹ கைவல்யம் அடைந் தனர்.

7. அதன் பின், 'ராய வரம்' என்னும் ஊரில், அண்ணுமலை ஞாந தேசிக ஸ்வாமிகள், பிரமோதூத வருஷம், ஆடி மாதம், ஜநித்து, 'தேனி பட்டி' என்னும், கழநி வாசல்' என்னும ஊருக்குச் சுவீகார புத்திர ராக வந்து இருந்து, தமது 16வது வய தாகிய விய வருஷம், கோவி லூரில், வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளைச் சரணுகதி யாக அடைந்து, வேதாந்த சாஸ்திர முணர்ந்து, காசி முதலிய பல ஸ்தல யாத்திரை சென்று, குரு குல வாசமாகத் தமது 41வது வய தாகிய, விரோதிகிருது (25) வருஷம் வரை இருந்து, தமது குருவின் விதேஹ கைவல்யத்தின் பின், குருவின் ஆஞ்ஞைப்படி, விரோதிகிருது வருஷம், வைகாசி மாதம், 27உ முதல், கோவி லூர் மடாலயத் தலைமை பூண்டு, வேதாந்த சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டு, திருக் களரில், தமது குரு மூர்த்தியின் அதிஷ்டாநத்திற்கு, கருங் கல்லால், அழ குற 60000 அறுபது (ஆயிரம்) ரூபாய் வரைச் செலவு செய்து, ஆலயம் ஆற்றியும், 25000ம் ரூபாய் வரைச் செலவு செய்து, திருக் களரில், மடம் ஒன்று இயற்றியும், பூசைக்கும், சாதுக்கள் போஜநத்திற்கும், 50,000 ரூபாய் வரை செலவு செய்து, விளை நில முதலியன வாங்கியும், அதிஷ்டாநத்திற்குக் கும்பாபிஷேகம் இயற்றியும், திட சித்த ராய், பிரஹ்ம வித்யா பிரசாரண சபை ஏற்படுத்தி, வேதாந்த விஜயக் கொடியினை நாட்டும் படி செய்து, தமது 49 வய தாகிய சித்தார்த்தி (8) வருஷம் வரை இருந்து, கலி 5020க்குச் சரியான சித்தார்த்தி வருஷம், வைகாசி மாதம், 8உ, புதன் கிழமை, கிருஷ்ண பக்ஷம், ஷஷ்டி திதி, சிம்ம லக்நம், திருவோண நக்ஷத்திரத்தில், பகல் ஒரு மணிக்கு, விதேஹ கைவல்யம் அடைந்தனர்,

8. அதன் பின், தேவி கோட்டையில் ஜநித்த, 'அண்ணுமலைச் சுவாமிகள்' என்னும், மஹா தேவ ஞாந தேசிக ஸ்வாமிகள், கோவி லூரில், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளைக் குரு வாக அடைந்து, வேதாந்த சாஸ்திரம் உணர்ந்து கொண் டிருந்து, தமது குருவின் விதேஹ

கைவல்யத்தின் பின், கோவி லூரில், ஆசிரியரா யி ரு ந் த அண்ணுமலே ஞாந தேசிக ஸ்வாமிகளின் ஆஞ்ஞைப்படி, திரு வண்ணுமலே ஈசாந்ய மடத்தில், தலேமை பூண்டு, ஏழு வருஷம் வரை இருந்து, பின், அண்ணுமலே ஞாந தேசிக ஸ்வாமிகள் விதேஹ கைவல்யத்தின் பின், அவரது ஆஞ்ஞைப்படி, கோவி லூரில், சித்தார்த்தி, வருஷம், வைகாசி மாதம், 9உ வியாழக் கிழமை, முதல் மடாலயத் தலேமை பூண்டு இருந்து, வேதாந்த சாஸ்திரங்களேப் போதித்துக் கொண்டு, திருக் களரில், குருவின் அதிஷ்டாநத்திற்கு, 50000 ரூபா வரைச் செலவு செய்து, பிராகாரப் பத்தி, ராஜ கோபுரம், முன் வெளி மண்டபம் முதலியன செய்து, கும்பாபிஷேக மியற்றியும், பூசை போசநத்திற்கு விளே நிலங்கள் வாங்கியும், "சாணுன் ஏந்தல்" என்னும் கிராமத்தில், பத் தாயிரம் ரூபா வரைச் செலவு செய்து, மடம், நெற் களஞ்சியம், இயற்றியும், குரு கைங்கர்யங்களேயம், குருவாற் செய்யப்பட்ட ஆலயாதிகளேயும், செவ்வனே கவனித்து நடாத்தியும் வந்தனர்.

கோவிலூர் பரம்பரை முற்றும்.

கோவிலூர் மடம் நீடூழி வாழ்க

---

| பக். | வ. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 13 | 19 | தேகிக | தேசிக |
| 21 | 24 | கேகத் | தேகத் |
| 22 | 14 | விதேச | விதேக |
| 28 | 1 | புஞச | புஞ்ச |
| | 26 | ஆக்கியம் | ஆக்கியும் |
| 31 | 6 | லாாவும் | லரகவும் |
| 32 | 26 | சிஹ்ம | சிம்ம |
| 45 | 25 | படிதான | படித்தான |
| 46 | 3 | கென் | தென் |
| 49 | 12 | வாச்கியம் | வாக்கியம் |
| | 13 | சிஷ்யள் | சிஷ்யன் |
| | 19 | விங்க | லிங்க |
| | 23 | கனக்காக | கணக்காக |
| 52 | 8 | தன்மையம் | தன்மையும் |

---

| பக். | வ. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 4 | 19 | பின்லுங் | பின்னுங் |
| 6 | 15 | செவ்லனே | செவ்வனே |
| 7 | 3 | மர்மஞ்ரு | மர்மஞ்ஞ |
| | 15 | சங்கராசாரிய | சங்கராச்சாரிய |

## கோவி லூர் பரம்பரை விளக்கம்.

ஆசு கவிப் பெரியார் ஒருவர் இயற்றியது.

பதின் நான்கு சீர்க் கழிநெடில் அடி ஆசிரிய விருத்தம்.

பரம்ஆக ஒளிர்சச்சி தாநந்தம் ஆம்விண்டு
பங்கயன் வசிட்டர் சத்தி—
பராசமா முநிமகா வியாசர்சீர் சுகர்கௌட
பாதர்கோ விந்த யோகி,
அருளுருவம் ஆம்சங்க ராசாரி ஆம்இறைகண்
அமர்பத்ம பாதர் உயர் அத்—
தாமலகர் தோடகா சிரியர்வார்த் திகர்வித்
தியாரண்யர் ஆகும் உரவோர்,
இருள்உருவம் அற்றஅவர் மரபதனில் வந்தசுப்
பிரமணிய தேவன் நயிந—
ஈசன்அழ கப்பஆ ரியன்வீர பத்திரகுரு
இன்பமுத் தைய அடிகள்,
தெருளுருவம் ஆம்உகந் தையன்நன் மைகளிலாத்
தீயனேன் தனையும் ஆண்ட—
சீர்முக்தி ராமலிங் கேசதே சிகன் இவர்கள்
திகழ்பதம்இ றைஞ்சு வோமே.

| 1. ஞான ஆசிரியர் | 16. வித்தியாரண்யர் |
|---|---|
| 1 சச்சிதாநந்தம்(சிவன்) | 2 அவர் மரபில் வந்த, |
| 2. விஷ்ணு | 1. சுப்பிரமணிய தேசிகர் |
| 3. பிரஹ்மா | 2. நயிந தேசிகர் |
| 4. வசிஷ்டர் | 3. அழ கப்ப தேசிகர் |
| 5. சக்தி | 4. வீர பத்திர தேசிகர் |
| 6. பராசரர் | 5. முத்தைய தேசிகர் |
| 7 வியாசர் | 6. உகந்த லிங்க ஞாந தேசிகர் |
| 8. சுகர் | 7. முத்தி ராம லிங்க ஞாந தேசிகர் |
| 9. கௌடபாதர் | 8. அருணாசல ஞாந தேசிகர் |
| 10. கோவிந்த யோகி | 9. பழநி யப்ப ஞாந தேசிகர் |
| 11 சங்கராச்சாரியர் | 10. சிதம்பர ஞாந தேசிகர் |
| 12: பத்ம பாதர் | 11. ராம சாமி ஞாந தேசிர் |
| 13. அஸ்த ஆமலகர் | 12. வீர சேகர ஞாந தேசிகர் |
| 14. தோடகாசாரியர் | 13. அண்ணாமலை ஞாந தேசிகர் |
| 15. வார்த்திக ஆசாரியர் | 14. மகா தேவ ஞாந தேசிகர் |

1. மதுரை, குட்டை யையா மடம்,

முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் மாணுக்கர், குட்டை ஞாந தேசிகர்.

2. வளவன் ஊர் மடம்,

துற வாண்டவர், அருணுசல ஞாந தேசிகர் மாணுக்கர், ஷண்முக சுவாமிகள்.

3. சிதம்பரம், பொன் னம்பல சுவாமிகள் மடம்,

சிதம்பர ஞாந தேசிகர் மாணுக்கர், பொன் னம்பல ஞாந தேசிக சுவாமிகள்.

4. காளையார் கோவில் மடம்,

ராம சாமி ஞாந தேசிகர் மாணுக்கர், செல்லப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள்.

5. மாஞ மதுரை மடம்,

சிதம்பர ஞாந தேசிகர் மாணுக்கர், நாராயண ஞாந தேசிக சுவாமிகள்.

6. திருக் களர் மடம்,

சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள்.

7. திருப் பூ வண மடம்,

வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்

8. சென்னை, சூளை மடம்,

வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், சுப்பய்ய ஞாந தேசிக சுவாமிகள்.

9. மதுரை, பிர மடம்,

முக்தி ராம லிங்க ஞாநதேசிக சுவாமிகள் மாணுக்கர், அர சப்ப சுவாமிகள், அவர் மாணுக்கர், பிரஹ்மாநந்த சுவாமிகள்.

10. சாக் கோட்டை மடம்,

ரமம சாமி ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர், வீரப்ப சுவாமிகள்.

अण्णामलै ज्ञान देशिकर्



ANNAMALAI GNANA DESIKAR

அண்ணமலை ஞான தேசிகர்

वीर शेकर ज्ञान देशिकर्



VEERA SEKARA GNANA DESIKAR

வீர சேகர ஞான தேசிகர்

महादेव ज्ञान देशिकर्



MAHA DEVA GNANA DESIKAR

மகா தேவ ஞான தேசிகர்

कोविलूर् मठम्.　　　कोविलूर् मठम्.　　　कोविलूर् मठम्.



Mukthi Ramalinga Gnana Desika Swamigal, Koviloor Mutt.

Arunachala Gnana Desika Swamigal, Koviloor Mutt.　　　Chidambara Gnana Desika Swamigal, Koviloor Mutt.

அருணாசல ஞாந தேசிக ஸ்வாமிகள், கோவில் ஊர் மடம்.　　　முக்தி ராம லிங்க ஞாந தேசிக ஸ்வாமிகள், கோவில் ஊர் மடம்.　　　சிதம்பர ஞாந தேசிக ஸ்வாமிகள், கோவில் ஊர் மடம்.

## கோவிலூர் மடத்தின்
## அத்புத மகிமா அகூபாரம்.
### (கடல் — சூரியன்)

திருக்களர் வீர சேகரன் அடியைத்
திநம்பணிந் தின்பம தடையப்,
பெருக்கம்ஆம் உலக சுகத்தினை வெறுத்துப்
பேசும்வே தாந்தம்எங் கணுமே,
விருப்பம்ஆய் விளங்க வேண்டியே விரித்து
விளக்குவன் விருப்புற யாரும்,
குருக்களின் ஆற்றல் குறைவிலா திருக்கக்
கூறுவன் வேதத்தின் முடிவை. 1

### பஞ்ச மூர்த்தி வணக்கம்.

பாவில்ஊர் வஞ்சி விநாயகன் அடியைப்
பசுமயில் குமரவேள் அடியைச்.
சேவில்ஊர்க் கொற்ற வாள்இறை அடியைத்
திருநெல்லை அம்மையின் அடியைத்,
தாவில்ஊர் அளிக்கும் முக்திரா மேசன்
தாமரை அடிகளைப் பணிந்து.
கோவிலூர் மடத்தின் அத்புத மகிமா
அகூபாரம் கூறுவன் நன்றே. 2



## ஆரம்ப உரை.

மலர் தலை உலகில், ஊர்வன 11. மநுடர். 9. நீர் வாழ்வன 10, பறவை 10, நாற் கால் மிருகங்கள் 10, தாவரம் 18 முப் பத்து முக் கோடி (பிரிவினர்) தேவர்கள் 16 என, எழு வகைப்பிரிவில் எண்பத்து நான்கு லக்ஷம் வித்தியாசம் உடையனவாக விளங்குகின்றன. மநுஷிய ஜந்மாவில் தான், கர்ம கர்த்திருத்வம், ஏனைய அறு வகைச் சந்மாக்களும் கர்ம பல போக்திருத் தன்மை உடையனவே. ஆனதால், மநித ஜந்மாவுக்குத் தான் செய்யக் கர்த்திருத் தன்மை இருத்தலால், மநிதன் அநேக ஜந்ம வாசனையினுல், பிரவிருத்தி மார்க்கத்திலே சென்று கொண்டிருக்கின்ருன். நிவிருத்தி மார்க்கத்தில், பிரவிருத்திப்ப தில்லை. நூறு கோடி ஜந்மங்களில் செய்த நற் கிருத்திய புண்ணியத்தினுல், நிவிர்த்தி மார்க்கத்தினை அடைய விரும்புகின்ருன். நிவிர்த்தி மார்க்கம் என்று சொல்லி, கர்மம் பக்திகளைக் கூறும் மார்க்கங்கள் பல உள. அதன் பிரசார மடங்களும், பல உள.

உண்மை யான நிவிர்த்தி மார்க்கம் அத்வைதமே ஆம். அதனை உத்பத்தி செய்யும் மடம், ஸ்ரீ சங்கராச்சாரியார் மடமே. ஸ்ரீ சங்கராச்சாரியார் 1200 வருஷங்களுக்கு முன் மலையாள தேசத்தில், காலடி என்னும் ஊரில் அவதரித்து, அத்வைதத்தினை உத்பத்தி செய்து, நான்கு திசையிலும் நான்கு மடங்களை ஏற்படுத்திஞர்கள். சிருங்க கிரியில், அதிகாரி யாகப் போனுல், பிராஹ்மணனுக்குபன் னிாண்டு வருஷம் பரிக்ஷை செய்து உபதேசிப்பார்கள். அதனுல், எங்கும் தாமதம் ஆகப் பரவிவந்தது. சிலர் விற்பனைக்குச் சாமான்களை உத்பத்தி செய்து, பிரசாரம்

பண்ணப் பல ஆட்களை ஏற்படுத்தி விடுகிறார்கள். அவர்கள் மூலம் விரைவில் பிரசாரம் ஆகிச் சாமான்கள் விரைவில் விற்கப்படுகின்றன. அது போன்று, சிருங்க கிரியில் உத்பத்தி செய்கிறார்கள் அத்வைதத்தினை. அந்த அத்வைத மான பொருள், தென் நாட்டில், கோவி லூர் மடத்திலும், அதனைச் சார்ந்த நூறு மடத்திலும், ஆயிரம் சந்யாசிகளுக்கும், ஆயிரம் இல் லறத்தாருக்கும். அதிகாரியா? அநதிகாரியா? என்று கவனிக்காமல், தெய்வ கதி-விவேக கதி, விரக்தி கதியால், கார் காலத்து மேகம் போலும், கோடை காலத்து மேகம் போலும், வருஷித்தல் ரூப உபதேசத்தினைச் செய்வதால், பதார்த்தங்களை விற்போர் சந்தை அன்று, மெயின் ரோட்டு ஓரமாகப் பரப்பி வைத்தால் அநாயாச மாகச் சநங்கள் ரொக்கம் கொடுத்துச் சாமான்களை வாங்கிக் கொண்டு போவதால், வியாபாரிக்குச் சாமான் விற்று, ரொக்க மாகப் பணம் வருகிறது. ஜநங்களுக்கும் அநாயாசம் ஆகச் சாமான் கிடைக்கிறது. அது போல, மூ வகை அதிகாரிகளுக்கும் அநாயாசம் ஆக அத்வைத போதம் உண்டாகிறது. அத்வைதமும், சிரமம் இன்றி, உலகம் பூராப் பரவுகிறது,

இவை, மகா கைலாசத்தி லிருக்கிற சிவனுலும், அப்ராகிருத வைகுண்டத்தி லிருக்கிற மகா விஷ்ணுவினுலும், சத்ய லோகத்தி லிருக்கிற பிரஹ்மாவினுலும், பிரசாரம் செய்ய முடியாது.

சிவ அவதாரம் ஆன சங்கராச்சாரியார் போன்றும், விஷ்ணுவின் அவதார மான கிருஷ்ண பரமாத்மா போன்றும், பிரஹ்மாவின் அவதார மான பிருஹஸ்பதி போன்

றும், மகா கைலாசம், அப்ராகிருத வைகுண்டம், சத்ய லோகம் விட்டு, கீழ் இரங்கி வந்து, ஹநுமார் போன்று, நாற் சந்தியில் நின்று, கருணையினால், பசி உடையோர்கட்கு வாரி வழங்கினால், அவர்கள், பசி மிகுதியினால், பகுத்துப் பாராது அருந்துவது போன்று, அனாயாசம் ஆகக் கிடைத்த சாமானைக் கைக்கொண்டு அநுபவிப்பார்கள்.

அதனால், மகா கைலாசத்தினின்றும், கைலாசத்திற்கும், கைலாசத்தி லிருந்தும், பூ லோகத்திற்கு, வந்து, பூலோகத்தில், கல் ஆல மரத் தடியில், ஜநகாதியருக்கும், அதே போன்று, அப்ராகிருத வைகுண்டத்திலிருந்து பிராகிருத வைகுண்டத்திற்கும், பிராகிருத வைகுண்டத்திலிருந்து, பூலோக ஆயர் பாடிக்கும், அதே போன்ற. சத்திய லோகத்தி லிருந்து, பிரஹ்ம லோகத்திற்கும், பிரஹ்ம லோகத்தி லிருந்து பூ லோகத்திற்தம் பூலோகத்தில் ஞாநிகள் குடும்பத்தில், அவரோஹணம் ஆகி வந்து உபதேசிப்பவர்கள் தான், அவதார புருஷர்கள் ஆவார்கள்.

இவ் வாறு வரும் பூ லோக மூன்று பரம்பரையிலும், பேத வாதம், விசிஷ்டாத்வைத வாதம், அபேத வாதம், (சுத்த அத்வைதம்) என மூன்றும் விளங்குகின்றது. ஆயினும், அபேத வாத வேதாந்தமே. கொள்ளத் தக்க தாகும். அதுதான் வேத சம்மதம். உபநிஷத் சம்மதம், வேதாந்த சம்மதமும் ஆகும், ஆகம சம்மதமு மாகும்,

கர்மம், பக்தி, பிரதீக உபாசனை, அஹங்கிரக உபாசனை, பேத ஞாநம், அதாவது, ஈசுவர ஸ்வரூப ஞாநம், ஜீவ ஸ்வரூப ஞாநம் யாவும் சாதநங்களே, அதாவது, சோபாநக்கிர

மங்களே, அதாவது, படிக் கிரமங்களே ஆகும். உயர்ந்த மலையை ஏறுவதற்கு, ஆயிரக் கணக்கான படிகள் செய்து, அதன் வழியே, உயர மலைக்குப் போனுர்கள். அது போன்றதே, கர்மம், பக்தி, பிரதிக உபாசனே, அஹங்கிரக உபாசனே, ஈசுவர ஸ்வரூப ஞானம், ஜீவ ஸ்வரூப ஞானம் யாவும். அது போன்று, பாகிய அந்தரங்க சாதநங்களே ஆகும். அபேத ஞானம் ஒன்றுமே, பறந்து செல்வது போன்றும், பாதுகாசித்தியால் செல்வது போன்றும், ஏரப்பிளேனில் செல்வது போன்றும், தனது யதார்த்த ஊரை அடைவதற்குத் தங்கு தடை யின்றிய நேரே சாதந மாம். முன்னர் கூறிய அவை எல்லாம், வளேந்து வளேந்து வருகிற கோணல் மார்க்க மாகும். திருப் பதி மலையைச் சுற்றிச் சுற்றிப் போவது போலும், வளேந்த மார்க்க மாகும். அவைகள், நேரே செல்லச் சாதந சம்பாத்தியம் இல்லாதவருக்குத் தேவையா யிருக்கிறது. சிலர் ரயிலில் பஸ்ட் கிளாஸில் போகிறுர்கள். சிலர், சக்கின் கிளாஸில் போகிறுர்கள். சிலர், டேட் கிளாஸில் போகிறுர்கள். அதற்குக் காரணம் பண வித்தியாசமே, அது போன்றே, அபேத ஞானம் உடையவர். பஸ்ட் கிளாஸில் போவது போன்றும், பேத ஞானம் உடையவர்கள் சக்கின் கிளாசில் போவது போன்றும், கர்மம் பக்தி பிரதிக அகங்கிரக உபாசனே உடையவர்கள், டேட் கிளாசில் போவது போன்றும் ஆகும். ஆயினும், மூன்று கிளாஸ் வண்டியும், சௌகரிய அசௌகரிய வித்தியாசத்தோடு, ஒரே காலத்தில் போய்ச் சேருவது போல, கர்மத்தாலும், பக்தியிறைலும், பேத ஞானத்திறைலும், அபேத ஞானத்திறைல், ஒரே ஜந்மத்தில் தனது யதார்த்த நிலேயினே அடைவது போல, அடையலாமா எனின், அது கூடாது. கர்ம அநுஷ்டாநம் செய்

பவர் நூறு ஜென்மத்திலும், பக்தி காண்ட அநுஷ்டானம் செய்பவர், ஐம்பது ஜன்மத்திலும், பேத வாதியர் முப்பது ஜன்மத்திலும். தனது யதார்த்த நிலையினை மெள்ள மெள்ள அநுஷ்டித்து அடைவார்கள். அதனால் போய்ச் சேருவதில் தாமதம் அதிகம் ஆகும் அது, எது போலும் என்றால், மாட்டு வண்டியும், பஸ்ஸும், பிளஸர்காரும், போவது போல், மெதுவாகவும், கொஞ்சம் வேக மாகவும். அதிக வேக மாகவும் போகுமே அன்றி, அபேத ஞான ரூப ஏரப் பிளேன் போன்று, நேரே விரைந்து போய்ச் சேரமாட்டாது என்பதை உணரவேண்டும்.

மனிதர் யாவருக்கும், விரைந்து போக வேண்டும் என்பது தான் விருப்பம், ஆனால், தேக பலம் மனோ பலம், இல்லாமையினால், போக முடியாமல், இருப்பது போன்று, மனோ திடம் இல்லாமையினால், கர்மம், பக்தி, பேத ஞானங் களை அநுஷ்டித்துப் பரம்பரை யாக ஆமை போன்று மெது வாகப் போய்ச்சேர லாம் என்று, ஊக்கம் இன்றிச் சோர்வு உண்டாகின்றது.

தேக பலம் மனோ பலம் உடையவர்கள், விரைந்து போவது போன்று, மனோ திடம் உடையவர்கள், குரு முக மாக தெய்வ கதி விவேக கதி, விரக்தி கதியால், அத்வைத அபேத ஞானத்தினை உபதேசிக்கப் பெற்று, முயல் போன்று விரைந்து சென்று, ஒரு ஜன்மம், இரண்டு ஜன்மம், மூன்று சென்மங்களில் முக்தியினை அடைந்து விடுகின்றனர்.

அதனால், கூடு மான வரையில், கீழ்ப் போன அநந்த ஜன்ம புண்ணிய புஞ்ச பரிபாகத்தினால் விவேகி யாக, ஞானி கள் குடும்பத்தில் ஜனித்து, முன் ஜன்ம நல் பழக்க வாசனை

யினுல், இந்த ஜந்மத்தில், சுத்த வாசனை மிகுந்து, மர்க்கட (குரங்கு) நியாயம் போலவும், மார்ஜால (பூனை) நியாயம் போலவும், பூனை தன் குட்டியை கவ்விச் செல்வது போன்று குருவலிய வந்து ஆட் கொள்வார் என்று இராமல். குரங்குக் குட்டி குரங்கைத் தாவிக் கட்டிப் பிடித்துக் கொள்வது போன்றும்,

யாதியா தொருவன் நீங்கியான் நோதல்
அதனினுல் அதனினுல் இலன்என்று,
ஓதலால் அனைத்தும் துயர்தரும் எனநீத்
துயர்பரம் பொருளினைக் காட்டும்,
தீதில்ஓர் குரவன் எங்குளன் எனவே
தேடுமால் அலைகடல் சூழும்,
பூதலம் மிசைஓர் துறவினேன் நறவு
பொலிமலர் தேடும்வண் டினைப்போல்,'' (63)

என்று வைராக்கிய தீபம் கூறுவது போல, தேன் நிரம்பிய மலரைத் தேடும் வண்டினைப் போலவும், சீவ காருண்யம் ஈசுர பக்தி, பாச வைராக்கியம், பிரஹ்ம ஞானம் என்னும் நான்கும் நிறைந்த ஞானாச்சாரியனைத் தேடி, அடைந்து, ஒரே ஜந்மத்தில் (அதாவது வர்த்த மாந (நிகழ் கால) ஜந்மத்தில் மோக்ஷம் அடையப் பிரயத்தநம் செய்வது உத்தம உத்தமம் ஆம். அல்லது, இரண்டு ஜந்மா, மூன்று செந்மாவிலாவது முமுக்ஷு வாக இருந்து, ஜந்மம் உயர்வு தாழ்வாக வராது, மூன்று தேக நிவிர்த்தி ரூப விதேக மோக்ஷம் அடைதலே நலமாம். இதனை விரித்துக் கூறுவது தான், இந்த 16 பிரிவினை உடைய (7 தரங்கம் 9 புத் புதம் உடைய) நூல் ஆகும்.

சிவ தருமோத்தரம் 8-21

"இறந்தேம் முனமே இனிப்பிறப்போம் என்றும் இந்த முறைஇனியாம், பிறந்த பொழுதே பிறவாத பெருமை உடைய பிஞ்ஞகனை, அறிந்தே அவலப் பிறப் பிறப்பை அறுத்து விடுவோம் அவன் அருளால், செறிந்தே குரவன் திருவடியைத் திகழ்ந்த வேதா கமம்தெருண்டே".

"என்று என்று எண்ணி இருக்கும் உயிர்." 8—22 என்று சிவ தருமோத்தரம் என்னும் நூல் கூறுதல் கொண்டும் உணர்க,

முண்டக உபநிஷத் 3வது முண்டகம், 2வது கண்டம், 9 வது மந்திரம்,

"ஸ யோ ஹ வை தத் பரம் பிரஹ்ம வேத பிரஹ்மைவ பவதி நாஸ்யாப் பிரஹ்ம வித் குலே பவதி தரதி சோகம் தரதி பாப்பாநம் குஹா கிரந்திப்யோ விமுக்துதா அமருதோ பவதி" (3 2,9)

"அப் பரப் பிரஹ்மம் உணர்ந்தவர் பிரஹ்மமே ஆவர். இவர் குலத்தில் அப்பிரஹ்ம வித்து ஆவ தில்லை." என்று முண்டக உபநிஷத் கூறுவதால், பிரஹ்ம வித்தின் பரம் பரையைக் கூறு வாம். பிரஹ்ம வித்து வரன் வரியான் வரிஷ்டன் என்னும் மூவரும்விருத்தி தார தம்மியம் உடையவரே அன்றி, ஸ்வருப ஞாநத்தில், வித்தியாசம் உடையவர்கள் அல்லர்.

பிரஹ்ம வித்துக்கள் அதிகம் பேர் உளர், வரன் வரியான் வரிஷ்டன் ஆகுபவர் சில பேர்கள் தான் இருப்பார்கள்.

சிருங்க கிரி சங்கரானந்த சுவாமிகள், நெரூர் சதாசிவப் பிரஹ்மேந்திர சரஸ்வதி சுவாமிகள், கும்ப கோணம், மௌந சுவாமிகள், திரு அண்ணுமலை, ஈசாந்ய மடம். கந்தப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள், திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணுமூர்த்தி ஸ்வாமிகள், போன்றவர்களே. வரன், வரியான், வர்ஷிட நிலைக்கு வந்தவர்கள் ஆவார்கள். எல்லாரும், நாலாம் பூமி யாகிய பிரஹ்ம வித்தின் நிலைமைக்கு வந்து தான், தேகத் திரய அத்தியந்த நிவிர்த்தி உண்டாகும். சமாதியில் இருக்கும் காலத்தில், தூல தேக நிவிர்த்தி ஆவ தில்லை, என்பதை உணர வேண்டும். ஜாக்கிர அவஸ்தையில் தான், தேக வியோகம் ஆகுமே அன்றி, ஸ்வப்ந அவஸ்தை, சுழுத்தி அவஸ்தை, சமாதி அவஸ்தைகளில், தேக வியோகம் ஆவ தில்லை என்பதை ஊகித் துணர வேண்டும்.

உலக அநுபவமும், அவ் வாறே இருக்கிறது என்பதனையும் உணர வேண்டும்.

---

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

## கோவிலூர் மடத்தின்

## அத்புத மகிமா அகூபாரம்

1. தரங்கம்

சிவன் பிராஹ்மண சரீரம் உடையவர். கர்மங்களைச் செய்பவர் கர்மங்களைச் செய்வதால், ஜீவர்கள் நல் வழிக்கு வருவார்கள், கர்மங்களைக் காக்க, விஷ்ணு என்னும் க்ஷத்திரியர்க ளாகிய அரசர்களையும், கருமங்கட்கு வேண்டிய பொருளை உண்டாக்க, பிரஹ்மா என்னும் வைசியர்

களையும், விரும்பினுர், சிவ பிரான் பரம்பரையில், கர்மம் பிரதாநமும், பக்தி ஞாநங்கள், அப்பிரதாநமு மாகும், பிராமணர்கள், கர்ம கர்த்தாக்களே ஆவர்.

பிராமணரில்; ஞாந சம்பந்த சுவாமிகள், பக்தியினை உடையவர் ஆவர். தக்ஷிணு மூர்த்தி, ஞாந பரம்பரையினை உடையவர் ஆவர் ஞாநி ஆன பிராமணர்கள் அநேகர்.

சுகர் - வியாசர், காதி - புண்ணிய பாவநர். சங்கராச் சாரிய ஸ்வாமிகள், ஆவார்கள்.

பிராமணரில், பெண் ஞாநி ஆனவர். கார்க்கி என்ப வர் ஆவர்.

பாசு பதப் பிரஹ்ம உபநிஷத்.

"தமோமய ஆத்மகோ ருத்ர: சாத்விகோத்மகோ விஷ்ணு, ராஜஜ மயாத்மகோ பிரஹ்மா" என்று கூறுவத ஞல், ருத்ரன் தமோ குண ஸ்வருபம் உடையவர். விஷ்ணு சத்வ குண ஸ்வருபம் உடையவர். பிரஹ்மா ரஜோ குண ஸ்வருபம் உடையவர் என உணர்க.

2. தரங்கம்

விஷ்ணு க்ஷத்திரிய சரீரம் உடையவர். பக்தி செய்ப வர். பக்தி செய்வதால், ஜீவர்கள் நல் வழிக்கு வருவார்கள், கர்மங்களைக் காப்பதறகாக, அதாவது, துஷ்ட மிருகங்கள், துஷடர்கள், இவற்றினின்றும் காப்பதற் காக, பிராஹ் மணர்கள், க்ஷத்திரியர்களை விரும்பினுர்கள், க்ஷத்திரியர்கள், பக்தியைப் பிரதாந மாக உடையவர்கள் கர்மம், ஞாநம், அப்பிரதாந மாக உடையவர்கள்.

விசுவாமித்திர மகரிஷி, கர்மங்களைக் காக்கும் பொருட்டு, ராம மூர்த்தியைத் தசரதரிடம் விரும்பினர்.

க்ஷத்திரியர்கள், போருக்கு அஞ்சாதிருக்கும் பொருட்டு, தேக விலக்ஷண ஆத்ம ஞாநத்தினை விரும்பினர்கள். அதனை அடைந்தார்கள்.

பகவாந் பகவற் கீதையில், 9வது அத்தியாயம், 2 வது சுலோகத்தில், "ராஜ வித்தியா ராஜ குஹ்யம்', என்று கூறுகின்றார். அஜாத சத்துரு க்ஷத்திரியர், "இன்று முதல் பிராஹ்மணர்களிடம் ஆத்ம ஞாநம் இருக்கட்டும்" என்று பிரகதாரண்ய உபநிஷத்தில் கூறுகின்றார்.

அதனால், பிராஹ்மணர்கட்கு, க்ஷத்தியரிடத்து இருந்து தான், ஆத்ம ஞாநம் வந்தது என்று தெரிகிறது.

ஞாநி ஆன க்ஷத்திரியர்கள் - கிருஷ்ணர் - அர்ஜ்ஜுநன் - ராமர் - அஜாத சத்துரு - சிகித்துவஜன் - ஜநகன் - பகீரதன் - பிரஹ்லாதன் - மகா பலி - இக்ஷுவாகு, முதலியோர் ஆவர்.

ஞாநி ஆன க்ஷத்திரிய பெண் - சூடாலை என்பவர் ஆவர்.

3. தரங்கம்.

பிரஹ்மா வைசிய சரீரம் உடையவர். இயற்கை ஆத்ம ஞாநி ஆவர். ஞாநி ஆனல், ஜீவர்கள், துக்க நிவிர்த்தி ஆகிச். சுகிகளாக இருப்பார்கள். கர்ம கர்த்தாக்களுக்குத் திரவிய சம்பாதநத்தின் பொருட்டு, வைசியர்கள், இயற்கை ஞாநி யாக இருந்து, கர்ம சாதநம், பக்தி

சாதநம், என்பவற்றிற்கு, வேண்டிய திரவியங்களை, மேகம் போல், பிரதிப்பிரயோசநங் கருதாது, வேண்டிய அளவு ஈந்தனர்.

வைசிரியர்கள் இயற்கை ஞாநம் உடையவர்கள், கர்மம் பக்தியினை, அப்பிரதாந மாகக் கொள்பவர்கள்.

ஞாநி, தன்னை அன்போடு கொடுப்பவன். ஏனையோர், தனக்கு அந்ய மான உடல் பொருள்கள் என்பவற்றை அன்போடு ஈவோர் ஆவர். பிரஹ்மா, இயற்கை ஞாநி என் பது, "கிருத உபாசர்கள் பிரஹ்ம லோகம் போய்ப், பிரஹ்மப் பிரளயத்தில், பிரஹ்மாவினால், தத் த்வ மசி என் னும் மகா வாக்கிய உப தேசம் செய்யப்பட்டு, ஞாநி ஆய், விதேக கைவல்யத்தினைப் பிரஹ்மாவின் தேகாந்தத்தில், அடைகின்றனர்" என்று பல பிரபல நூற்கள் கூறுவதால் உணர லாம்.

நந்த கோபால ராகிய கோவைசியருக்குக் கிருஷ்ண பரமாத்மா உபதேசித்த தாகப் பாகவதம் கூறுகின்றது.

வைசிய பிரஹ்ம ஞாநிகள் அநேகர் - சிவ தோழ னாகிய குபேரன், விக்கிரமாதித்தன் தம்பி யாகிய பட்டி, (வைசியர்), சித்ர குப்தன் (குப்தன் என்பது வைசியர் பட்டப் பெயர்).

பட்டிநத் தடிகள் (காவேரி பூம் பட்டினம்) வைசியர்.

வைசியப் பெண் ஞாநி, மந்தா லசா, ஆவர்.

3. தரங்கம் 1வது புத் புதம் (அலை)
பிரஹ்மா.

கோவிலூர் முக்தி ராம லிங்க ஞாந தேசிக சுவாமிகள் இவ் வா ருய பிரஹ்ம (பிரஹ்மா) பரம்பரையில், சிருங்க

கிரி மடத்தினைச் சார்ந்த பெரியாரால், உபதேசிக்கப் பெற்று, வந்தவர்கள், சிக்கல் பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் ஆவார்கள். அவர் கள், அவதரித்து, சுமார் இரு நூறு வருஷங்கள் ஆகின் றன. சமாதி உற்று 140 வருஷம் ஆகின்றன.

அவர்கள் பால், உபதேசம் பெற்று, குரவன் ஆணைப் படி, வடக்கே திரு அண்ணுமலையில், தியான பரராய் இருந்த, கந்தப்ப ஞான தேசிக சுவாமிகள் என்னும் ஈசான தேசிகர், தமது தியான காலக் காவல ராக, அண்ணுமலை யாரைப் புலி ரூப மாக இருக்கும் ஆறு செய்து, பல அத் புதத் திரு விளையாட்டோடு இருந்து, 130 வருடங் களுக்கு முன். தேகத் திரய நிவிர்த்தி யாகிய, விதேக கைவல் யம் அடைந்தார்கள்.

தெற்கே, கோவிலூரில், தக்ஷிணு மூர்த்தியின், கலா அவதா ர மாக விளங்கிய, 'முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள், காரைக் குடியில், கலி ஆதி (4892)க்குச் சரி யான, விரோதி கிருது வருஷத்தில் ஜநித்துத், தமது பதின் மூன் ருவது வயதில், சிக்கல், பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞான தேசிக சுவாமிகளை, விவேக கதியினல், குரு வாக அடைந்து, சதுர் விதப் பணிவிடைகளையும் செய்து, மகா வாக்கிய உபதேசம் பெற்று, தமது பதி னைந்தே முக்கால் (அதாவது இரண்டே முக்கால்) வருஷத்தில், நாநா ஜீவ வாதக் கட்டளை முதல், பதி ஞரு வது சாந்தி பாட மாகிய ஞான வாசிட்டம் வரைப் பாட சமாப்தி செய்து, தமது பதி ஞறரை வருஷத்தில், தமது குரு பத்திரிக்குக், கோவிலூரில் இருந்து, மயில் குஞ்சுகளை அநுப்பி, தமது 17வது வயதில், கோவிலூர்த் திரு நெல்லை

அம்பாள் தம் திருப்பணியை முடித்துக் கொள்ள, காரைக் குடியில், ஆண்டவர் வீட்டுக்குக் கன்னிகையாக எழுந் தருளி வந்து, ஆண்டவர் தாயார் வள்ளியம்மை ஆச்சிக் குத் தெரிசநம் கொடுத்துத், திருப் பணியை முடிக்கச் சொல்லல், தமது பதினேழுறை வயதில், கோவிலூர்த் திருநெல்லை அம்பாள் திருப்பணிக்குத், திரவிய ஆர்ச்சநம் செய்யத், தேவி கோட்டைக்குச் செல்லல், தமது பத் தொன்பது வயது (அதாவது ஒன்றரை வருஷம்) வரைக் காரைக் குடியில், தம் கிரகத்திலும், திருவாசல் மடத்தி லும், அதளத் தோப்பிலும், ஆயிரக் கணக்கான இல்லற மாணவ அதிகாரிகளுக்கு, வேதாந்த சாஸ்திர போதனை செய்தல், பின், தமது இருபத்தேழாவது வயதில், தமது குருமூர்த்திகளின், தேகத் திரய நிவிர்த்தியாகிய, விதேக கைவல்யம் அடைதலுக்குச் சென்றிருந்து, குருவின் திரு மேனியைச் சமாதிவைத் (கநநம் செய்)தல், தமது இருபத் தெட்டு வயது முதல், முப்பதாவது வயது (அதாவது இரண்டு வருஷம்) வரைக் கோவிலூரில், கோவிலுக்கு மேல்புரம் இருந்து, சில காலம், வேதாந்த சாஸ்திரம் போதித்தல், சிங்காரத் தோப்புப் போட்டிருக்கிற இடத்தி லிருந்து, சில காலம் வேதாந்த பாடம் போதித்தல், தமது முப்பத்தோராவது வயதில், இப்போதிருக்கிற கல் மண் டபம் கட்ட ஆரம்பிக்க, அதே சமயத்தில், திருநெல்லை அம்பாள், பிராமணக் கந்நிகை ரூபமாய்த் தேங்காய், வாழைப் பழம், புஷ்பம், மஞ்சள், வெற்றிலை, பாக்கு முதலியவற்றை, ஒரு தாம்பாளத்தில், வைத்துக்கொண்டு வந்து, ஆண்டவர் கையில் கொடுத்து, ''இதனை உடையுங் கள்'' என்று சொல்ல, அவற்றை வாங்கி, அம்பாள் அநுக் கிரகம் ஆனதால், ''இவ் விடத்தில் எப்போதும் மாருத

அந்நதாநமும், வேதாந்த உபதேசமும், நடக்க வேண்டும், சாதுக்கள் நிறைய வசிக்கவேண்டும்'' என்று சொல்லித், தேங்காயினை உடைத்துத் தச்சுச் செய்தல், தமது முப் பத்தோராவது வயது முதல், ஐம்பத்தொருவது வயது, (அதாவது 26 வருஷம்) வரைக் கல் மண்டப மடத்தி லிருந்து, வேதாந்த நூற்களேயும், ஞாந வாசிட்டத்தினை, ஏழு முறையும், பாடம் சொல்லிச் சமாப்தி செய்தல், முதலிய அநேக அத்புதத் திரு விளையாடல்களை, மக்கள் கண்டு கழிபே ருவகை கொள்ளுபடி யாக, நாற் பத்து மூன்று வருஷம் செய்து கொண்டு, திரு நெல்லை அம்பாள் சாந்நித்தியம் பெற்று, ''சத்திய சங்கற்பம்'' ''ஜகத் துச்சம்'' என்பவற்றை, உலகத்தவர்கட்குப் பிரத்தியக்ஷ மாக அறிவித்துக் கொண்டு, திரு நெல்லை அம்பாள் ஆலயம், மது புஷ்கரணி, திருக்குளம் முதலியவற்றைக் கண்டார் காமுறும் வண்ணம் திருப் பணி செய்து, கும்பாபிஷேகம் நடாத்தி. ''சொற்பழுது புரியாத வணிகர்குலம் திரம்பணியும்'' என்றும், ''வணிகர்குல ஓஷதிகள் தழையஉப தேச மழை மாருது பொழியு முகிலே'' என்றும், பிள்ளையார் பட்டி, கற்பக விநாயகர் வணக்கம், பாதரக் குடி, பஞ்சாக்ஷர உபதேச குரு, ஆத்ம வித்தியா குரு, கொப் புடை யம்மன், திரு நெல்லை அம்மன், முதலிய மூர்த்திகளை, ''சுவாநு பவத் திருவாக்கு'' என்னும் நூலால் துதித்து, துற வாண்டவர் என்னும் அருணசல ஞாந தேசிகர், கருணை நிதி ஆகிய சிதம்பர ஞாந தேசிகர் என்னும் இரு சூரியர் சந்திரர்களை உத்பத்தி செய்தும், நேமத்தான் பட்டி பழநி யப்பய்யா என்னும் நக்ஷத்திரத்தினை உண் டாக்கியும், காசியில், விதேக முக்தியினை அடைந்த, சின்னத் துறவு சுவாமிகளுக்கும், இன்னும் அநேக துறவி யாகிய மாணவருக்கும், பள்ளத்

தூர் முத்து வீரப் பய்யா, கோட்டை யூர் அண்ணுமலை ஐயா முதலிய இல் லற மாணவருக்கும், உபதேசம் செய்து கொண்டு இருந்தும், பிரஹ்ம வித்தியா பரம்பரை ஒளி விளங்கச் செய்தும், தமது 56 வய தாகிய, கலி ஆதி 4947க்குச் சரி யான பிலவங்க வருஷம், பங்குனி மா தம், 8 திகதி, ஞாயிற்றுக் கிழமை, பௌர்ணமி திதி, உத்திர நக்ஷத்திரத்தில், குன் றக் குடிக், குமரப் பெருமான், தீர்த்த வாரித் திரு நா என் று, தேகத் திரய நிவிர்த்தி யாகிய விதேக கைவல்யம் அடைந்தா ர்கள்.

அப் போது, உலகம் இருந்த நிலைமையை, ஒரு ஆசு கவிப் பெரியார், அடியில் வரும் கவியால் வருணிக்கின்ருர்.

''மடம்உண்டோ சிவாலயங்கள் மிகுதி உண்டோ
வாசிட்டம் படிப்பதுண்டோ மநத்துள் ஞாநத்,
திடம்உண்டோ நால்வர்தமிழ்ப் படிப்பார் உண்டோ
திவ்வியமாம் உதாரமுதல் குணங்கள் உண்டோ,
விடம்உண்டோன் அடியர்குழாம் மிகுதி உண்டோ
மெய்அறம்சத் திரம்விரைப்பூங் காவும் உண்டோ,
வடகைலைக் கிறைவன்எனும் முத்தி ராம
வள்ளல்திருக் கழநிநகர் வாரா முன்னம்.'' என

முக்தி ராம வள்ளல் கழசி நகர் (கோவில் ஊர்) வாரா முன்னம் 1. மடம், 2. சிவாலயங்கள் மிகுதி, 3. வாசிட்டம் படிப்பது, 4. மநத்துள் ஞாநத் திடம், 5. நால்வர் தமிழ் படிப்பார், 6. உதாரம் முதல் குணங்கள், 7. அடியர் குழாம் மிகுதி, 8. அறம், 9. சத்திரம், 10. விரைப் பூங்கா என்னும் பத்தும் இருந்தனவா என்றும், அவற்றுள், எட்டு இல்லை என்றும், சிவாலயமும், அடியார் குழாமும், மிகுதி

யாக இல்லை என்றும், கூறி வருணிப்பது கொண்டு, முக்தி ராமேச அவதாரத்தின் பின் தான் இந்தப் பத்துச் சாதநமும், இந்தப் பகுதியில் தோன்றி விரிந்தன என்று தோன்றுகிறது.

ஆண்டவரிடத்துச் சிலர் வந்து, வேதாந்தத்தினை அதிகாரிக்குச் சொல்லவேண்டும் ஏகாந்த ஸ்தாநத்தில், அப்படிப்பட்ட ரஹஸ்யத்தினைப் பப்ளிக் காக, "அதிகாரி அநதிகாரி எல்லாருக்கும் சொல்ல லாகுமா" என்று கேட்டார்களாம். அதற்குச் சமாதாநம், கோடைக் காலத்து மேகமும், கார் காலத்து மேகமும், புள்ளத் தாக்த, நன் செய், புன் செய், பார்த்துத் தான் பெய்கிறதா? மலை மேடுகளில் உபயோகம் இல்லாத உவர்ப் பூமியில் பெய்கிற தில்லையா? மேடு, பள்ளம், மலை, நன் செய், புன் செய், உவர்ப் பூமி, எங்கும் ஒரே படித் தாகப் பெய்கிறது. நன் செய், புன் செய், பள்ளத் தாக்கில் தண்ணீர் நிற்கிறது, விளைந்து பலப் பிராப்தி உண்டாகிறது. அது போன்று, வேதாந்தத்தினை (மழையை) வருஷித்தால், அதிகாரிகள் மநதில், தங்கி தெய்வ கதியால், மோட்சம் அடைவார்கள் என்று சமாதாநம் சொன்னார்களாம்.

எல்லாரும், விரக்தி-விவேக கதியால், குருவை அடைந்து மோக்ஷம் அடைந்தால், கோணல் தென்னை மரம் போன்ற, அநதிகாரிகளுக்கு, தெய்வ கதியால், அநாயாசம் ஆக, மோக்ஷம் எப்படிக் கிடைக்கும். மழை கருணையினால் எங்கும் பெய்வது போன்று, ஆண்டவர் காலம் முதல் எல்லாருக்கும் பிரஹ்ம வித்தியா உபதேசம் நடந்து வருகிறது.

3வது தரங்கம் 2வது புத்புதம்.

2 (பிரஹ்மா)

கோவிலூர், துறவாண்டவர் என்னும் அருணுசல ஞாந தேசிக சுவாமிகள்

தந வைசிய நகரங்களுள், தலைமை யாக விளங்கும் தேவி கோட்டை என்னும் ஊரில், திரண்ட செல்வ வந்த ராய்த், துற வாண்டவர் என்பவர்கள், யுவ வருஷம் அவ தரித்துச், சில காலம் இல் லறத்து இருந்து, தமது 19 வய தாகிய விஜய வருஷத்தில், தந வைசியப் பட்டிநத் தடி கள் போன்று, விரக்தி உண்டாகிக், கோவிலூர் ஆண்ட வர் என்னும் ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிக சுவாமி களை. விரக்தி கதியால், சரணுகதி அடைந்து, பிரஹ்ம உப தேசம் பெற்று, வேதாந்த சாஸ்திர சிரவணம் செய்து, குசாக்கிர புத்திசாலித்தநத்தால், சுருதி யுக்தி அநுபவங்களில் சிறந்து விளங்கிஞர்கள்.

சில காலம் சென்று, சங்யாசி யாய்ச், சிதம்பரம், திரு அண்ணுமலையில் வசித்துக் கொண்டு, குருவின் ஆணைப் படித், தம்மைச் சரணுகதி அடைந்த, பஞ்ச தசி கவி-பஞ்ச தசி சூர்ணிக் கொத்து - ராம கிருஷ்ண பண்டிதர் உரை. வாசிட்டம், சம்சாரதரணி வியாக்யாநம். அத்துவித ரச மஞ்சரி கவி, உரை, தக்ஷிணுமூர்த்தி அஷ்டகம், கவி, என் பவற்றை மொழி பெயர்த்த, காசியில், மண்டலேசுவரரா யிருந்த, கோட் டாறு, நித்தியாநந்த சுவாமிகள், திரு நெல் வேலி சுப்பிரமணிய சுவாமிகள். வளவ ஞூர், குமார புரி மடம், ஷண் முக சுவாமிகள்,அருணுசல ஞாந தேசிகர் பிள் ளைத் தமிழ் பாடிய, பஞ்ச லக்ஷண வித்துவான், மதுரை,

சுப்பராய சுவாமிகள், கோவிந்த சாமி முதலிய பல துறவி கட்கும், பாக னேரி, முத்துக் கருப்பையா, மதுரை, மெய் யப்பய்யா முதலிய பல கிரகஸ்தர்கட்கும், மகா வாக்கிய உபதேசம் செய்து, வேதாந்த சாஸ்திரங்களை, வாசிட்டம் வரைத், தர்க்க யுக்திகளோடும், சுருதிகளோடும், மாணுக் கர் மநம் தெளியும்படி, தெளி வாகப் பக்குவம் அறிந்து, ஜகம் புகழப் போதித்தும், வந்தார்கள்.

அது காலை, யாழ்ப் பாணம் நல் லூர், ஆறு முக நாவலரும், சிதம்பரம் வந்திருந்து சுவாமிகளைத் தெரிசித்து, உபதேசங்களைக் சிரவணித்து, வணங்கி வாழ்த்திப் போவதை வழக்க மாகக் கொண்டிருந்தனர்,

திருப் பாப்புலி யூரில் இருந்த, வீர சைவ, முத்துச் சர வண சுவாமிகள் என்னும் பெரியார், 32000 சுலோக வாசிட்டத்தினை, ஆநந்த போதேந்திர சுவாமிகள் செய்த உரையோடு, தமிழில் மொழி பெயர்த்திருந்ததனை, விரும்பிய வண்ணம் பொருள் கொடுத்து, ஓலைச் சுவடியினை வாங்கி வந்து. நல்ல பிரதி யாக எழுதிப், பூஜித்தற் குரிய தாகச் செய்து, சாந்தி பாடம் போன்று, அந் நூலைப் போற்றும் படி செய்த பெருமை அவர்களுக்கே உரிய தாம்.

யாத்திரை யாகத், திரு வெண் காட்டிற்குப் போயி ருந்த போது, சிவ பெருமான், ஒரு நாள் இரவு, அர்ச்சகர் வடிவ மாக வந்து சர்க்கரை அந்நம் (அக்கார அடிசில்) கொடுத்தார், அதை வாங்கி அருந்தினார்கள்.

அதன் பின், திரு அண்ணுமலைக்குப் போன போது, காவி உடையை நீத்து, தம் மரபில், முன் துறவறத்தை அடைந்த பட்டிநத் தடிகள், "உடைகோவணம் உண்டு"

என்று கூறியபடி, கோவணத்துடன் (கௌபீநத்துடன்) தமது 32இ வயது வரை (அத்ாவது 13இ வருஷம் வரை) (கௌபீநத்துடன்) வசித்து வந்தனர்.

முக்தி ராமலிங்க ஞாந தேசிக சுவாமிகள், விதேக கைவல்யம் அடைந்த பின்னர், தம் குருவின் ஆஞ்ஞைப் படி, கலி ஆதி 4948 சாலிவாகந சகாப்தம் 1769 பில வங்க வருஷம் பங்குனி மாதம் 8உ பாநு வாரம், உத்தரா யணம், பௌர்ணமி திதி, உத்திர நஷத்திரம், கந்நிகா இலக் நம் இவை கூடிய சுபதிநத்தில் கோவிலூர் மடாலயக் குரு ஸ்தாநத் தலைமை பூண்டு, பிரஹ்ம வித்தியா உபதேச குரு பர ராக இருந்து, ஆயிரக் கணக் கான மாணவர், இல் லறத்தாரும், துற வறத்தாரு மாக, வட விருஷத்தின் கீழ் தக்ஷிணாமூர்த்தி யிருக்க, ஜநகர் சநந்தநர், சநத் குமாரர், சநாதநர் என்னும் இவர்கள், முன் மாணவ ராக இருந்து மூன் றறைக் கோடி வருஷம் உபதேசம் கேட்டது போன்று, இருந்து சிரவணம் செய்தனர்.

தம் குருவின் அதிஷ்டாநத்தினைக் கருங் கல்லால் கட்ட ஏற்பாடு செய்தார்கள். மடத்தின் சிஷ்டாசாரத்தினை, ஒழுங்கு முறை ஆக்கினார்கள். கைவல்ய நவநீதம் என்னும் வேதாந்த நூலுக்கு, பத சாரம் எனப் பெயர் வைத்து, அரிய பெரிய விரி வுரையை முதன்முதலில் இயற்றினார்கள், நல் நிலம் தாண்டவ ராய சுவாமிகள் செய்த கைவல்ய நவ நீதம் என்னும் வேதாந்த நூலுக்கு, பதின்மர் இயற்றிய உரையிலும், இது தான், முதன் முதலில் செய்யப்பட்ட உரைய யாகும். இந்த உரையில், உள்ள சில விஷயங்களைப் பின் உரைகாரர்கள் அப்படியே எடுத்துக் கையாண்டிருக் கிறார்கள். "சிடாசாரம்" (கவி 50) என ஒரு நூல் தம்

அநுஜர் பொருட்டுப் பங் நூலி லிருந்து திரட்டுதல் செய்தார்கள். திரு நெல்லை அம்பாள் சாந்நித்தியம்உள்ள வர்கள். செல்வவந்தரா யிருந்து, ஏஷணைத் திரயங்களை யும், விடடுத் துறந்தவர்கள். ஞான மத யானை யாக, உலகம் முழுவதும் சஞ்சரித்துக் கொண்டு வரும் போது, எதிர்த் துக் கேட்பார் ஒரு வரும் இல்லை. அப்படிச் சஞ்சரித்து வரும் சமயம், திரு இசைஞலூர் ஐயாவாள் என்னும் பெரியார், இவர்களைச் சந்தித்து, "இப் போது நமக்கு ஞான மும், சாஸ்திர வியுத்பத்தியும் மிகுந்து திடகாத்திரத்தோடு இருப்பதால், "நாம் பெரியன்" என்று உங்கட்கு, "அகங் காரம் மிதந் திருக்க லாம்" என்று கேட்டார்க ளாம். அத ற்குப் பதில் அகங்காரம் இருத்தல் தவறு தான் என்று ஒப் புக் கொண்டார்க ளாம். அடியவர் போஜநத்துக்குக் கழநி வாசல் கிராமத்தினை, மடத்திற்கு வாங்கி வைத்தார்கள். இவ் வாறு, பதி னேழு மாதம், நட ராஜ உபாசக ராய்ப் பல அத்புதங்களையும் செய்து, மடத்தில், பல பிரஹ்ம வித் துக்களை நாற் றிசையி லும் இருந்து, வாழை அடி வாழை என எழுந்தருளி உபதேசிக்கும்படி செய்து, தமது 34வது வய தாகிய, கலி ஆதி 4950 சாலி வாகந சகாப்தம் 1771க் குச் சரி யான, சௌமிய வருஷம், கடக மாதம், பாநு வாரம், 9 திகதி, இரவு, தக்ஷிண அயநம், சதுர்த்தி, திதி, கிரீஷ்ம ரிது. சுக்ல பக்ஷம், மிதுந லக்நம், பூர நக்ஷத்திரம் கூடிய சுபதிநத்தில், திரு நெல்லை அம்பாள் தபம் செய்து திருக் கல்யாணம் நடக்கும் சமயத்தில், தேகத் திரய நிவிர்த்தி யாகிய, விதேக கைவல்யம் அடைந்தார்கள்.

3வது தரங்கம், 3வது புத் புதம்

### நேமத்தான் பட்டி பெரிய ஐயா என்னும் பழநி யப்ப ஞான தேசிக சுவாமிகள் (3 பிரஹ்மா)

நேமத்தான் பட்டி என்னும் ஊரில் செல்வ வந்தர் குலத்தில் அவதரித்த, பெரிய ஐயா என்று வழங்கும், பழநி

யப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள், துறவாண்டவர் ஆஞ்ஞை யின்படி, கோவிலூர் மடாலயத் தலைமை, கலி ஆதி 4950 க்குச் சரியான, சாலிவாகந சகாப்தம் 1771க்கு ரிகர, சௌமிய வருஷம், கடக மாதம், 9உ, பாநுவாரத் தன்று முதல், ஏற்று, 11 வருஷம் வரை இருந்து, பிரஹ்ம வித்தையினை (பிசைஷ அங்கத்தில் சத்திருக்கும் எனக் கருதி அதனைக் கழுவி உண்ணும் தன்மை உடைய விரக்த சங்யாசியாகிய) பெரிய மகா தேவ சாமி, சின்ன மகா தேவ சாமி முதலிய துறவிகளுக்கும், நூற்றுக் கணக் கான இல் லறத்தாருக் கும், உபதேசித்துக் கொண்டு, சகுண தத்பர ராய், நடராஜ மூர்த்தி உபாசக ராய், கலி ஆதி 4961க்குச் சரியான, ரௌத்திரி வருஷம், ஆடி மீ 8 திகதி, சநிக் கிழமை, மக நக்ஷத்திரத்தில், திரு நெல்லை யம்மாள் தேரில் எழுந்தருளி யிருக்கும் சமயம், தேகத் திரய நிவிர்த்தி யாகிய விதேச கைவல்யம் அடைந்தார்கள்.

**3வது தரங்கம், 4வது புத்புதம்.**

**ஐயாவாள் என்றும், கருணாநிதி என்றும், பெயர் விளங்கிய, சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள்**

4. பிரஹ்மா

தந வைசிய நகரங்களுள், தலைமை யாக விளங்கும் தேவி கோட்டை என்னும் ஊரில், திரண்ட செல்வ வந்த ராய், துற வாண்டவர் என்பவர்களுடன் லக்ஷமணர் போன்று, கநிஷ்ட ராய், சுபாநு வருஷத்தில், அவதரித்து. சில காலம் இல் லறத்து இருந்து, கோவி லூரில், தமையனு ராகிய துறவு சுவாமிகளைத் தெரிசித்து வரச் சென்ற போது, மலபரிபாக வசத்தினுல், ஸ்ரீ முக்தி ராம லிங்க

ஞான தேசிக சுவாமிகளைத், தெய்வ கதியால், சரணுகதியாக அடைந்து, பிரஹ்ம உபதேசம் பெற்று, நானா ஜீவ வாதக் கட்டளை முதல், வாசிட்டம் வரைப், பதினுறு நூற்களை யும் கேட்டு. பாட சமாப்தி செய்து, சுவேத (வெண்மை) வஸ்திரத்துடன் ஜநக ராஜா போன்று இருந்து வந்தனர்.

நேமத்தான் பட்டி, பழநி யப்ப அய்யா அவர்கள் விதேக கைவல்யத்துக்குப் பின், முத்தி ராம லிங்க ஞான தேசிகர் அநுக்கிரகப்படியும், துறவாண்டவர் ஆஞ்ஞைப் படியும், மாணவருடைய புண்ணிய புஞ்ச பரிபாகப்படி யும், கலி ஆதி 4961க்குச் சரியான, ரௌத்திரி வருஷம் ஆடி மாதம், 8 திகதி, சநிக் கிழமை, மக நக்ஷத்திரம் கூடிய சுப திநத்தில், கோவிலூர் மடத்தின் தலைமைப் பதவியை ஏற்று, பிரஹ்மா போன்று, பிரஹ்ம சபையில் எழுந்தருளி, பிரஹ்ம வித்தியா உபதேச ஆசாரியராக விளங்கினுர்கள்.

தாது வருஷம், ஆடி மாதம் 4உ வரைத் தாமாகவே, பதினுறு வருஷமும், நேமத்தான் பட்டி பழநியப்ப அய்யா அவர்களுடன் பதினெரு வருஷமும், ஆக இருபத்தேழு வருஷம், நக்ஷத்திர எண்ணிக்கையில் இருந்து, தமது மேம்பாட்டால் யாவரும் மதிக்க, ஆஜாநுபாகு ஆய், (ஜாநு - முழங்கால் - பாகு - கை, ஆ - வரை) இருந்து, அளவிறந்த மாணவர்களுக்கு, வேதாந்த பாடம் போதித்து, மகாவாக்கிய உபதேசம் செய்து, குரு அதிஷ்டானத்தினைக் கற்பணி ஆக்கி, சோமாஸ்கந்த மூர்த்திக்குக் கருங் கல்லால் இழைத்த நீலம் ஒத்த காந்தி வீசும்படி யான, ஆலயம் ஒன்று அரியதாக ஆற்றி. யாளி அணி வெட்டுக் கால், விமாந, மண்டபம் இயற்றி, மது புஷ்க் கரணி தீர்த்தக் குளம், கருங் கல்லால், அணைக் கட்டு, படிக்

கட்டு. அதன் மைய மண்டபம், கோபுரம். முதலியவற்றை லக்ஷ ரூபாய் செலவில், கண்டார் பேருவகை கொள்ளும் வண்ணம் செய்து, குவலயம் போற்றக், குரு மணியாய்த், திரு நெல்லை அம்பாள் அருளால், கண்ட, மதி மன்னர், நிதி மன்னர், புவி மன்னர், வணிகர் குழுக்களும், அன் புற்றுத் தண்டம் போல், விழுந்து அஷ்டாங்க வணக்கம் செய்ய, மடத்தின் சம்பிரதாய முறைகளை விதிப்படி வகுத்து, பாடம் கேட்கும் முறை, பாடம் போதிக்கும் முறைகளைச் சிறப்புறச் செய்து, சிஷ்டாசாரத்தினை, இவ் வாறு உலகில் எங்கணும் இல்லை என்று, கற்றோரும், மற்றோரும், கண்டு கூறும்படி பழக்கியும், மதுரை, சொக்கலிங்கம், மீனாக்ஷி அம்மனுக்கு, மதுரை, குட்டைய ஞான தேசிகர் செய்த, திருப் பணியைப் பூர்த்தி செய்து, விண் ணுலகத்தாரும், மண் ணுலகத்தாரும். கண்டு வியப்புறும் வண்ணம். கும்பாபிஷேகம் இயற்றியும், சிதம்பரத்தில், மூலட்டாநேசுவரர் ஆலயத்தைக் கட்டிக், கால யுக்தி வருஷம் ஆனி மாதம் 14 திகதி, சோம வாரத் தன்று, கும்பாபிஷேகம் இயற்றி, நடராஜ உபாசக ராய்ப், (பகவற் கீதைக்கு கூடார்த்த தீபிகை உரை, கைவல்ய நவநீதத்துக்கு, தத்துவார்த்த தீபிகை உரை, வேதாந்த சூடாமணிக்கு, மறை பொருள் விளக்க உரை, விசார சாகர ஐந்து தரங்க மொழி பெயர்ப்பு. பிரஹ்ம கீதை வியாக்யாந மொழி பெயர்ப்பு, எறும் பூரில் தத்துவ ராய சுவாமிகள் அதிஷ்டாநத்துக்கு, லக்ஷ ரூபாய் செலவு செய்து, கருங்கல் ஆலயம் அமைத்தல் முதலியவற்றைச் செய்து, சிதம்பரத்தில், கோ. சித. மடம், ஸ்தாபித்த, சிதம்பரம், பொன்ன னம்பல ஞாந தேசிக சுவாமிகள், மாணு மதுரை நாராயண சுவாமிகள், மதுரை குட்டை

யையா மடம், கண்ணப்ப சுவாமிகள், சிதம்பரம், மௌந சாமி மடம், ஆறு முக சுவாமிகள், காரைக் குடி, ராம சாமி ஞாந தேசிகர், திருக் களர் ஆண்டவர். ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், நெஞ்சு விடு தூது செய்த, சிக் கல், பொருள் வைத்த சேரி, மடம், சட்டை யப்ப ஞாந தேசிக சுவாமிகள், முதற் பல துறவிகளுக்கும், ஆயிரக் கணக் கான இல் லற முமுக்ஷுக்கட்கும், பிரஹம வித்தை யினை உபதேசஞ் செய்தும், விக்கிரக ஆராதனை, நிர்க் குணத் தியாநங்களை, அதிகாரி பேதம் இன்றி, யாவருக்கும் வாழை அடி வாழை யாகச் செய்து வரும்படி பழக்கியும், திரி கால ஞாநி யாய், லக்ஷுணுவிருத்தி (பிரஹ்ம நாமாவலி கவி 105) என ஒரு நூலும், பாகவதத் திரட்டு, சிறிது, பெரிது, வாசிட்டத் திரட்டு என மூன்றும், "குரு ஸ்துதி குசு மாஞ்சலி" எனும் ஸ்தோத்திரங்கள் பலவும் செய் தும், ஜீவந் முக்த ராய், ஜநகர் அஜாத சத்துருவைப் போன்று இருந்து, கோவி லூரில் பின் நடக்க வேண்டிய தற்கு, பிளான் (படம்) ஒன்று அமைத்தும், கோவி லூர், திரு நெல்லை அம்பாள் ஆடிப் பூரத் திரு விழாவில், இரண் டாம், திரு விழா அன்று, தமது தேகம், வியோகம ஆகும் என்பதை, தீர்க்க தரிசத்தினால், முன்னரே உணர்ந்து, இல் லறத்தாரும், துற வறத்தாரும், ஆகிய அடியர் குழாங் கள், இரு நூற்றுவருக்கும் உரைத்தும், இருந்து, தமது 53வது வய தாகிய, கலி ஆதி 4977 சாலி வாகந சகாப்தம், 1797க்குச் சரியான, தாது வருஷம், தக்ஷிண அயநம், கிரீஷ்ம ரிது, ஆடி மாதம், 4 திகதி, கிருஷ்ண பக்ஷம், ஏகா தசி திதி, சோம வாரம், துலா லக்நம், ரோஹிணி நக்ஷத் திரம் கூடிய சுபதிநத்தில், திரு நெல்லை அம்பாள் கற்பக

விருக்ஷ வாகநத்தில் எழுந்தருளி வரும் சமயம், தேகத் திரய நிவிர்த்தி யாகிய விதேக கைவல்யத்தினை அடைந்தார்கள்.

3வது தரங்கம், 5வது புத்புதம்.

ஸ்ரீ ராம சாமி ஞாந தேசிகர்.
(5 பிரஹ்மா)

காரைக் குடி என்னும் ஊரில், நகரத்தார் மரபில் அவதரித்து, கோவிலூரில் வந்து சிதம்பர ஞாந தேசிகரைக் குரு வாக அடைந்து, வேதாந்த சாஸ்திர படம் கேட்டுப் பிரஹ்ம வித்து ஆய், அஞ்சாத நெஞ்சு உடையர் ஆய் இருந்து வந்தனர். வேதாந்த சாஸ்திர நிஷ்ணாத ராய் இருந் தனர் தாது வருஷம் ஆடிமீ 4உ தமது குரு சிதம்பர ஞாந தேசிகர், விதேக கைவல்யம் அடைந்ததும், கோவி லூர், குரு ஸ்தாநத்தினை குருவரரின் ஆஞ்ஞைப்படி ஏற் றுப், பிரஹ்ம சபையில் பிரஹ்ம உபதேசம் செய்து கொண்டு, கோவி லூர் மடத்தின், சாப்பாட்டுக் கட்டை கல்லினால் கட்டியும், திரு நெல்லை அம்பாள் சந்நிதியில் அஷ்ட சக்திக் கால்கள் செய்தும், கழநி வாசல் கிராமத் தினை விருத்தி செய்தும், ஏழு வருஷம் ஐந்து மாதம் ஆசா ரிய ஸ்தாநத்தை வகித்திருந்து, கலி 4984க்குச் சரி யான, சுபாநு ஹூ மார்கழி மாதம் 6உ புதன் கிழமை, கிருஷ்ண பக்ஷ, ஷஷ்டி திதி, மக நக்ஷத்திரம் கூடிய சுப திநத்தில் விதேக கைவல்யம் அடைந்தார்கள்.

சிதம்பரம், கோ. சித. மடம் பொன்னம்பல ஞாந தேசிகர் வந்திருந்து, சமாதியை (கநநத்தை) சிறப்புறச் செய்தார்கள்,

3வது தரங்கம், 6வது புத்புதம்.

## ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர்.

(6 பிரஹ்மா)

"பாண்டி நாடே பழம் பதி" என்று விதந்து ஓதப் பெற்ற பாண்டி நாட்டில், புது வயலில், கலி 4949:க்குச் சரி யான, இலக்ஷ வருஷம் ஆவணி மாதம் 12உ வெள்ளிக் கிழமை, (கிருத்துவ வருஷம் 1848) வீர சேகர ஞான தேசிக சுவாமிகள் அவதரித்துப், பதி னுறு வயது வரை, ராம மூர்த்தியைப் போன்று, பால கௌமார லீலைகளோடு இருந்து, 16-வது வய தாகிய ரக்தாக்ஷி வருஷம், கோவி லூரில், சிதம்பர ஞான தேசிக சுவாமிகளைக் குரு வாக அடைந்து, வேதாந்த மகா வாக்கிய உபதேசம் பெற்றுச், சாஸ்திராப்பியாசம் செய்து, சந்நியாசி யாய், தமது 35 வய தாகிய 19 (சுபானு) வருஷம், மார்கழி மாதம் வரை, பல தல யாத்திரை செய்து, தியாக பர ராய்ச், சுகரைப் போன்ற வைராக்கியம் உடையவ ராய் இருந்து, கோவி லூர், முக்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள், "கோவி லூரைப் பூ லோக கைலாயம்" என்று கூறும்படி ஆக்க, வீரன் வரு வான், என்று தம் சிஷ்யர்களிடத்தில் கூறிய, சத்திய வாக் கின்படியும், தம் குருபரர், சிதம்பர ஞான தேசிக சுவாமிகள் சத்திய சங்கற்பப்படியும், இராம சாமி ஞான தேசிக சுவாமி களின் அந்திய காலச் சங்கற்பப்படியும், சிதம்பரம்-பொன் ன்ம்பல ஞான தேசிக சுவாமி களின், "குரு ஸ்தானம் பிரஹ்ம லோகம் போல், பிரஹ்ம வித்தியா பீடம் ஆக விளங்க வேண்டும்" என்ற விடா முயற்ச்சிப்படியும், சாதுக்களு டைய நீண்ட கால சங்கற்பப்படியும், பின் வந்து சரணுகதி

அடையும் அநேக அரிய மாணவர்கள் புண்ணிய புஞ்ச பரி பாகத்தின்படியும், (இந்த அறு வகைக் காரணங்களும் பிடர்பிடித்து உந்த) சுபாநு வருஷம் மார்கழி மாதம் 6உ புதன் கிழமை, தேவர்கள் விழிக்கும் காலம், பிரஹ்ம வித்தியா பீடம் ஆகிய கோவிலூர் மடத்தின் ஆசாரிய பதவியை ஏற்றுத், தமது அறு பத்து இரண்டே முக் கால் வயதாகிய, இரு பத்தேழு வருஷம் ஐந்து மாதம் (விரோதி கிருது வருஷம் வைகாசி மாதம் 27உ) வெள்ளிக் கிழமை வரை, இருந்து, அஷ்ட வசுக்கள் போன்றும், அஷ்ட திக்குப் பாலகர் போன்றும், "1 வேங்கட முநிவர் 2 வெள்ளி யங்கிரி முநிவர் 3 அண்ணுமலை ஞாந தேசிகர் 4 (ஆராவயல்) முத்தைய சாமிகள் 5 (பழை யூர் பட்டி) அருணுசல சாமிகள் 6 மெய்யப்ப ஞாந தேசிகர் 7 நாராயண முநிவர் 8 மகா தேவ ஞாந தேசிகர்" என்னும் எண்மரையும், மும் மூர்த்திகளின் அவதாரம் போன்று, "சென்னையில் இருபத்தைந்து வருஷம் பிரதி திநமும், மாலை ஏழு மணி முதல், எட்டுமணி வரை, ஆயிரம் பேருக்கு வேதாந்த உபந்யாசம் செய்தும், மொழி பெயர்ப்பு - உரை - ஸ்தோத்திரம் என முப் பத்து ஆறு நூல் செய்தும் இருக்கின்ற, 1 சுப்பய்ய ஞாந தேசிகேந்திர சுவாமிகள், 2 எண் வகை விருதாவலியோடு கூடிய, சத சாத்திர கர்த்தா, திருப் பூ வணம், வேதாந்த மட ஸ்தாபகர், காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள், 3 வேத மொழி பெயர்ப் பாசிரியர் சிவாநந்த யதீந்திர சுவாமிகள்" என்னும் மூவரையும், இருபத்தேழு வருஷம், இன்னும் இரண்டாயிரம், இல் லற, துறவற மாணவர்களையும், பிரஹ்ம உபதேசம் செய்து, பிரஹ்ம வித்துக்கள் ஆக்கியும், கோவிலூர் திரு நெல்லை அம்பாளுக்குத் தேய்ப்புப் போட்ட கருங் கல் ஆலயம், தம் குரு மூர்த்தியின் அதிஷ்டாந ஆல

யம், மடம், பிரஹ்ம சபை, கைலாசக் கொட்டகை, குரு பூஜைக் கட்டு, முதலியவற்றை நகரத்தார் கொடுத்த இரு பத் தேழு லக்ஷ ரூபாய் வரைச் செலவிட்டு, கண்டார் எல் லாரும் கழி பே ருவகை கொள்ளும்படி நன் ருகச் செய்து, தியாநத்தில் திரு நெல்லை அம்பாள் வந்து, "எடுத்த காரியங் கள் யாவும் வினைப்பின் வண்ணம் தடை யின்றி முடிவு பெறும், இனி எந்தக் காரியத்தையும் ஆரம்பிக்கலாம்." என் று கூறிய ஆசிர்வா தத்தினைப் பெற்றும், கிலக வருஷம் சித்திரை மாதம் 11௳ குரு வாரத் தன் று, பதி னுன்கு உலகத்தவரும் வந்து பார்த்துக் குறை கூற இயலாத வகை யில், ஒரு லக்ஷ ரூபாய் செலவு செய்து, நூன் முறை வழா து, லக்ஷக் கணக்கா னவர் உண வருந்திய, அந்ந சப்தத் தைக் கேட்டு, அந்நப் பக்ஷிகள் பயந்து, மேல் உலகம் வசிப்ப தாகச் செல்லும் ஆறும், சிருங்க கிரி, ஜகத் குரு, சாரதா பீடம், ஸ்ரீ சச்சிதாநந்த சிவா பிநவ நரசிஹ்ம பாரதி சுவா மிக ளவர்கள் நேரில் கண்டு, அள விலா ஆநந்தம் கொள்ளும் ஆறும், கும்பாபிஷேகம் செய்தும். சிருங்க கிரியில், சாரதா ஆலயத்தை, ஐம்ப தாயிரம் ரூபாய் செலவு செய்து, நீல மேக சியாமள இழைப்புக் கருங் கல் திருப் பணி இயற்றியும், திருக் களரில், சிவாலயம், திருக் குளம், திரு வீதி, நந்தந வநம் முதலியவற்றை நான்கு லக்ஷ ரூபாய் செலவில் நான்கு வருஷத்தில், காட்டை களரி ஆகச் செய் தும், கலி ஆதி 5013க்குச் சரி யான விரோதி கிருது வருஷம் சித்திரை மாதம் 22௳ வியாழக் கிழமை, பூர்வ பக்ஷ சஷ்டி திதி, சித்த யோகம், மிதுந லக்கிநம், புநர் பூச நக்ஷத்திரத் தில், தேவ லோகத்தவரும், பூ வுலகம் வந்து, களிப் புறும் படி, சாஸ்திர யுக்த மாக, ஒரு லக்ஷ ரூபாய் செலவில், கும் பாபி ஷேகம் இயற்றியும், திரி கால ஞாநி ஆய், சாக்கைக்

கோட்டை வீரசேகரரே அவதரித்தமையின், அவதார புருஷர் போன்றே, இரு வகை (அதாவது சகாம நிஷ்காம) தவம் உடைய ராய், மாணிக்க வாசகர், சிதம்பரத்தில், நட ராஜா வுடன் ஜோதி சொரூபத்தில் ஐக்கியம் ஆனது போல், கலி ஆதி 5013க்குச் சரி யான, விரோதி கிருது வருஷம், வைகாசி மாதம், 27உ வெள்ளிக் கிழமை (கிருத்துவ ஸு (1911) சுக்கில பக்ஷம், திரயோதசி திதி, விசாக நக்ஷத்திரத்தில், பகல் 12 மணிக்குத், தெற்கு வீதியில், தேரின் முன் பாகக் கடவுள் எழுந்தருளி யிருக்க, நட ராஜாவின் சந்நிதியில், துருவாசர் பின் பாகத்தில், தேகத்தினைப் பிராமணர்கள் தாங்கும்படி, "மகா தேவ மகா தேவ மகா தேவேதி யோ புரூயாத், ஏகேனைவ பவேந் முக்தி த்வாப்யாம் சம்புர்ரிணீபவேத்" என்னும் பிரமாணங் கொண்டு, "மகா தேவ மகா தேவ" என்னும் மந்திர உச்சாரணத்தோடு கூடப், பத் தாயிரம் ஜநங்களின் மத்தியில், திடப் பிரஞ்ஞையோடு, தேகத் திரய நீக்கம் ஆகிய விதேக கைவல்யம் அடைந்து அதிஷ்டாந ஸ்வரூபம் ஆனார்கள்.

பின்னர், தூல தேகத்தைச் சமாதி வைத்து, அண்ணுமலை ஞாந தேசிகரும், மகா தேவ ஞாந தேசிகரும் இரண்டு லக்ஷம் ரூபாய் வரைச் செலவு செய்து, ஆலயம் அழகாக அமைத்தும், ரூபாய் ஐம்ப தாயிரம் செலவு செய்து, மடம் கட்டியும், 50 வேலி விளை நிலம் மிகுந்த பொருட் செலவில், வாங்கி வைத்தும், மதுரை ஸ்ரீ மீநாக்ஷி அம்மன் சந்நிதி போலும். சிதம்பரம் நட ராஜ சந்நிதி போலும், திருப் பதி வேங்கடேசர் சந்நிதி போலும், பூஜை நைவேத்தியம் நடந்து வரும்படி ஏற்பாடு செய்தார்கள்.

திருக் களர் ஆண்டவர் மாணவர்கள் பல் லாயிரவர்களுள், யாம் ஒருவர் தாம் சமாதி ஆகி 56-வது வருஷம்

வரை, நமக்கு விய வருஷம் முதல் வயது 82 ஆகியும், தேக திடத்தோடும், திட ஞானத்தோடும், 'எவ் விதத்தும் அவன் அருளைத் தேசம் குலவ வளர்ப்போன் சற்சீடன்'' என்று கூறுகிறபடி, வீர சேகர ஞான தேசிகரது பெருமையைப், பிரசங்க வாயிலாகவும், நூறு நூல் இயற்றிய வாயி லாகவும், கேள்வி சமாதான வாயி லாகவும், இன்னும் பல திறத்தும், காசி முதல் கந்நியா குமரி - மலாயா நாடு வரைச் சென்று, விளக்கிக் கொண்டு இருக்கின்றோம். இன்னும், நீணுள் அரோக திடகாத்திரத்தோடு இருந்து, பதினுன் குலகும் சென்று, விளக்கிக்கொண்டிருக்கும்படி, பகவத் கிருபையும், இறைவன் அருளும், குரவன் அருளும், உண்டாக வேண்டும் என்று,

"இறவில் எப்பத மும்பெற வேண்டிலேன் என்றும்,
பிறவி வேண்டுவன் நின்திருப் பணிசெயப் பெறினே."

(மோக வதைப் பரணியில் உள்ள, சசி வந்ந போதம், தத்துவ ராய சுவாமிகள் இயற்றிய தாம்.) எனக் கூறும் பிரமாணம் கொண்டு பிரார்த்திக்கின்றேன்.

திருக்களர் ஆண்டவர், திரு அடிகள் நீடுழி வாழ்க,
பொங்கும் மங்களம் எங்கும் தங்குக.

3வது தரங்கம், 7வது புத்புதம்.

ஸ்ரீ அண்ணுமலை ஞான தேசிகர்.

(1 விஷ்ணு)

ராயவரம் என்னும் ஊரில், அண்ணுமலை ஞான தேசிக ஸ்வாமிகள், பிரமோதூத ஹூ ஆடி மீ ஜநித்து, தேனி

பட்டி என்னும், கழசி வாசல் என்னும் ஊருக்குச் சுவீ காரப் புத்திரன் ஆக வந்து இருந்து, தமது 16வது வயது ஆகிய விய வருஷம் கோவி லூரில், ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளைச் சரணாகதி யாக அடைந்து, வேதாந்த சாஸ்திரம் உணர்ந்து காசி முதல் பல ஸ்தல யாத்திரை சென்று, குரு குல வாசம் ஆகத் தமது, 41வது வய தாகிய விரோதிகிருது (25) வருஷம் வரை இருந்து, தமது குரு வின் விதேக கைவல்யத்தின் பின், குருவின் ஆஞ்ஞைப் படி, விரோதிகிருது வருஷம், வைகாசி மாதம், 27உ முதல், கோவில் ஊர் மடாலயத் தலைமை பூண்டு, வேதாந்த சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டு, திருக் களரில், தமது குரு மூர்த்தியின் அதிஷ்டாநத்திற்கு கருங் கல்லால் அழ குற அறுப தாயிரம் ரூபாய் வரைச் செலவு செய்து ஆலயம் ஆற்றியும், திருக் களரில், இருபத் தை யாயிரம் ரூபாய் செலவு செய்து, மடம் ஒன்று இயற்றியும், ஐமப தாயிரம் ரூபாய் வரைச் செலவு செய்து, விளை நிலம் முதலி யன வாங்கி வைத்தும், குரு வின் அதிஷ்டாநத்திற்குக் கும்பாபிஷேகம் இயற்றியும், திட சித்தர் ஆய், கோவி லூரில், பிரஹ்ம வித்யாப் பிரசாரண சபை ஏற்படுத்தி, வேதாந்த விஜயக் கொடியினைச் சாதுக்களையும், பண்டிதர் களையும், கொண்டு, நாட்டும்படி செய்து, உலகம் உள் ளளவும், அழியாப் புகழோடும் விளங்கும்படி செய்தும், தமது 49 வய தாகிய சித்தார்த்தி வருஷம் வரை இருந்து, கலி 5020க்குச் சரி யான, சித்தார்த்தி வருஷம் வைகாசி மாதம் 8 திகதி, புதன் கிழமை, கிருஷ்ண பக்ஷம், ஷஷ்டி திதி, சிஹ்ம லக்நம், திரு வோண நக்ஷத்திரமும், கூடிய சுப திநத்தில், பகல் ஒரு மணிக்குச் சாதுக்கள் முந்நிலையில் விதேக கைவல்யம் அடைந்தனர்.

### 3வது தரங்கம் 8வது புத்புதம் (குமுழி)

### அண்ணுமலைச் சாமி என்னும் மகாதேவ ஞாந தேசிகர்

### (2 விஷ்ணு)

தேவி கோட்டையில், வைசிய குலத்தில், சுப்பிரமணி யன் செட்டியாருக்கு, புத்திரன் ஆக அவதரித்து, விவாகம் உடையவர் ஆய், புத்திர சந்தாநம் உடையவ ராய், இருந்து, தமது அத்தையின் உபதேசப்படி விரக்தர் ஆய், கோவி லூரில் வந்து, காசிகாநந்த சுவாமிகள் கூறியபடி, வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளைக் குரு வாக அடைந்து, வேதாந்த சாஸ்திர பாடம் கேட்டுக் கொண் டிருந்து, சில காலம் சென்று, ஆவுடையார் கோவில் போய்த், துறவி ஆய், கோவி லூர் வந்து இருக்கின்ற போது, தமது குரு, வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகள், விதேக கைவல்யம் அடைந்த பின், கோவி லூரில், ஆசிரிய ராய் இருந்த, அண் ணுமலை ஞாந தேசிக ஸ்வாமிகளின் ஆஞ்ஞைப்படி திரு அண்ணு மலை ஈசாந்ய மடத்தில், தலைமை பூண்டு, ஏழு வருஷம் வரை இருந்து, பின் அண்ணுமலை ஞாந தேசிகர் ஆஞ்ஞைப்படி, கோவிலூரில், சித்தார்த்தி வருஷம், வைகாசி மீ 9௳ வியாழக் கிழமை முதல், மடாலயத் தலைமை பூண்டு இருந்து, வேதாந்த சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டு, திருக் களரில், குருவின் அதிஷ்டா நத்துக்கு, ஐம்ப தாயிரம் ரூபாய் வரை வசூல் பண்ணிச் செலவு செய்து, பிராகாரப் பத்தி, ராஜ கோபுரம், முன் வெளி மண்டபம் முதலியன செய்து, கும்பாபிஷேகம் இயற்றியும், பூஜை போஜநத்துக்கு விளை நிலங்கள் வாங்கி யும், சாணுன் ஏந்தல் கிராமத்தில், பத் தாயிரம் ரூபாய்

வரைச் செலவு செய்து, மடம், நெல் களஞ்சியம் இயற்றியும், குரு கைங்கரியங்களையும், குருவால் செய்யப்பட்ட ஆலயாதிகளையும், செவ்வனே கவனித்து, குரு ஸ்தாநத்துக்குக் குறைவு வராதபடி நடத்தி கொண்டு, சாதுக்கட்குச் சந்தோஷம் உண்டாகும்படி, முற் சரண் புகுந்த பெரியோரை ஆதரித்தும், அவர் சொற் கேட்டு நடந்தும், கோவி லூர் பெயர் முன் போன்றே மங்காதிருக்கும்படி

வருஷம் மாதம் வரை
வருஷம் நடத்தி வந்து ஹ
ஸ்ரீ தேதி கிழமை
நக்ஷத்திரம் தேதி பக்ஷம்

அயநம் கூடிய புண்ணிய திநத்தில், பகல் போஜநத்துக்கு மேல், பல சாதுக்களும் வெளியூர்களில் இருந்து முன்னரே வந்திருக்க, விதேக கைவல்யம் அடைந்தனர். அதன் பின், அடியார் குளாங்கள் அனைவரும் கூடிக் கரந விதி செய்தார்கள்.

3வது தரங்கம், 9வது புத்புதம் (குமிழி)
சோம சுந்தர ஞாந தேசிகர்.

தாந வைசிய குலத்தில், பள்ளத் தூரில், அவதரித்து, காரைக்குடி வந்து, விவாகம் ஆகிச், சந்ததி யின்றி, விரக்தி ஆய், கோவி லூர் வந்து, அண்ணுமலை ஞாந தேசிகரைக் குரு வாக அடைந்து, வேதாந்த சாஸ்திர பாடம் கேட்டுக் கொண்டு, குருவின் விதேக கைவல்யத்துக்குப் பின், கோவிலூரிலும், சாக்கிக் கோட்டை மடத்திலும், வசித்து வந்தனர்

சிதம்பரம், கோ. சித. மடத்தில் இருந்த சுவாமிகள் விதேக கைவல்யம் அடைந்ததனால், கோவி லூர், மஹா

தேவ ஞாந தேசிகரால், சிதம்பரம், கோ. சித. மடத்துக்கு
வருஷம் மாதம் உ
யில், அதிபதி யாக நியமநஞ் செய்யப்பட்டது. அது முதல், சிதம்பரம் மடம், இறும்பூ தூர், தத்துவ ராய சுவாமிகள் (அதிஷ்டாநக் கோவில், மடம், நிலம், முதலியவற்றைப் பார்த்துக்கொண்டு, நட ராஜர் தெரிசநம் செய்து கொண்டு, வந்த முமுக்ஷுக்கட்கு, வேதாந்த பாடம் சொல்லிக் கொண்டு இருந்தார்கள்.

சிதம்பரம் மடத்தின், வட புரம் முகப்புத் திண்ணையை உள்படுத்தி காம்பவுண்டு சுவர் எடுத்தார்கள்.

வருஷம் சிதம்பரம் மடாதிபதி யாக இருந்தார்கள், அதன் பின், கோவிலூர் மடம், மஹா தேவ ஞாந தேசிகர் விதேக கைவல்யம் அடைந்ததும்
ஹு மீ ஃ
கிழமை கோவிலூர் மடாதிபதி யாக ஏற்படுத்திஞர்கள். அது முதல், கோவிலூர் மடாதிபதி யாக இருந்து வேதாந்த பாடங்களை முமுக்ஷுக்கட்கு உபதேசித்துக் கொண்டிருக்கின்றூர்கள்.

அது காலேயில் திரு நெல்லே அம்மன் கோவில் மேல் பார்வை கோவிலூர் மடத்தில் இல்லே.

சாஞன் ஏந்தல் கிராமம் ஓலேக் குடிப் பட்டிக் கிராமங்கள், களத்தூர் கிராமங்கள், ஜமீந் ஒழிப்பில் கோவிலூர் மடத்துக்கு இல்லாமல் போய்விட்டது. பண்ணே நிலங்கள் ஐ நூறு ஏக்கர் மட்டும், ஜமீந் ஒழிப்பில் இருந்து நீக்கப்பட்டது.

களத் தூர் கிராமத்தில், சிவன் கோவில் இருப்பதால், நெல் களஞ்சியம், மடம், முதலியவற்றை பாதுகாத்து வருகின்றனர்.

கோவி லூர் மடத்தில், மடாதிபதி யாக இருந்து கொண்டு, பாடம் சொல்லிக் கொண்டு, சிதம்பரம், கோ. சித. மடம். இறம்பூ தூர். தத்துவ ராய சுவாமிகள் சமாதிக் கோவில், மடம், சிக்கல், கோ. ஆ. மடம், முதலியவற்றைக் கவனித்து நடத்தி வருகிறார்கள்.

சுபம். அஸ்து

4 தரங்கம் (அலை)

நூறு மடங்கள் அட்டவணை.

1 கோவிலூர், முத்தி ராம லிங்க ஞான தேசிக சுவாமிகள் மடம்.

2 திருக் களர். வீர. சேகர ஞான தேசிக ஸ்வாமிகள் மடம்.

3 திரு அண்ணுமலை, கந்தப்ப ஞான தேசிக ஸ்வாமிகள் ஈசாந்ய மடம்.

4 மதுரை, தெற்கு வெளி வீதி, குட்டையசுவாமிகள் மடம்.

5 சிதம்பரம், பொன்னம்பல சுவாமிகள் மடம்.

6 சிக்கல், பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞான தேசிக ஸ்வாமிகள் மடம்.

7 மதுரை, தெற்கு வாசல், பிரஹ்மாநந்த சுவாமிகள் மடம்.

8 திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணுமூர்த்தி சுவாமிகள் மடம்.

9 சிதம்பரம், மௌன சாமிகள் மடம்.
10 மதுராஸ், சூளை, வீர. சுப்பய்ய ஞான தேசிக ஸ்வாமிகள் மடம்.
11 மானா மதுரை நாராயண சாமி மடம்.
12 கோவில் பட்டி, முக்தானந்த சாமிகள் மடம்.
13 தஞ்சா வூர், கரந் தட்டான் குடி, பால் சாமிகள் மடம்.
14 திருப் பூவணம், காசிகாநந்த ஞானாச்சார்ய ஸ்வாமிகள் மடம்.
15 துறையூர், சின்ன மடம்.
16 காளையார் கோவில், செல்லப்ப ஞான தேசிக சுவாமிகள் மடம்.
17 மழ பாடி, ஸ்வயம்பிரகாச சுவாமிகள் மடம்.
18 சென்னை, வியாசர் பாடி, சிவப் பிரகாச சுவாமிகள் மடம்.
19 எறும்பூர், தத்துவ ராய சுவாமிகள் மடம்.
20 குடி யாத்தம், பிச்சன் ஊர், வேலுச் சாமி மடம்.
21 தஞ்சா வூர், சங்கர சாமி மடம்.
22 பஞ்ச நதிக் குளம், அரு. வேதாந்த மடம்.
23 வேதாரணியம், கந்த சாமி, சாதுக்கள் மடம்.
24 சாக் கோட்டை, கோ. ராம. வீரப்ப சாமி மடம்.
25 வேப்பஞ் சேரி, நட ராஜர் மடம்.
26 புனல் வாசல், ராம சாமி சாமி மடம்.
27 துறை யூர், சிவப் பிரகாச சுவாமிகள், மடம்
28 கோயம் புத்தூர், பேறை யூர், சாந்த லிங்க சுவாமிகள் மடம்.
29 விருத்தாசலம், குமார தேவர் மடம்.
30 திருப் போரூர், சிதம்பர சுவாமிகள் மடம்.

31 திரு அண்ணுமலே, பவழக் குன்று, அழகாநந்த சாமிகள் மடம்.
32 மேட்டுப் பாளேயம், சபாபதிச் சுவாமிகள் மடம்.
33 பசு பதி கோவில், ஆறு முக சுவாமிகள் மடம்.
34 திரி சிராப் பள்ளி, குன்றி மணிச் சாமி மடம்.
35 திரு வாரூர், மடப் புரம், சோம நாதன் கோவில் மடம்.
36 திரு வை யாறு, சிங்கப் பூர் சாமி மடம்.
37 நொச்சியம், மெய் கண்டார் மடம்.
38 ஏகாம்பரக் குப்பம், சிவ. சுப்பிரமணிய சாமி மடம்.
39 வல்ல னுடு, அறி வாநந்த சாமி மடம்,
40 திருப் பரங் குன்றம், மகா தேவ சாமி மடம்.
41 இடைக் காட் டூர், பரிபூர்ண சாமி மடம்.
42 புதுச் சேரி, வேதா நந்த சாமி மடம்,
43 இராம நாத புரம், கைவல்யம், ராமாநந்த சாமி மடம்.
44 திரு அண்ணுமலே, பூண்டி, மாணிக்க சுவாமிகள் மடம்.
45 தேவனும் பட்டு, சுப்பிரமணிய சுவாமிகள் மடம்.
46 பழங் கோவில், பெரிய சாமி மடம.
47 பார்த்திபன் ஊர், கூடல் அம்மாள் மடம்.
48 திரி சிராப் பள்ளி, தாரா நல்லூர், சொக்க லிங்க சுந்தர மூர்த்தி சாமி மடம்.
49 திரி சிராப் பள்ளி, வரகன் ஏரி, திரிபு ரை ஞாந ஆசிரமம்,
50 நாக லாத புரம் புதூர், அத்வைதாநந்த சாமி மடம்.
51 வாணியம் பாடி, பொன்னமபல சாமி மடம்.
52 குடி யாத்தம், நல் லூர் பேட்டை, வையாபுரிச் சாமி மடம்.

53 கார்க் கூர், ராமாசிரமம், சிவ ராஜாநந்த சாமி மடம்.
54 ஸ்ரீ ரங்கம், பூசப்படித் துறை, வேதாந்த மடம்.
55 ராமேசுவரம், கந்த மாதந பர்வதம், சிவ ஆசிரமம்.
56 காஞ்சி புரம், மாத்தூர் சாமி மடம்.
57 போளூர், விடோபா சாமி மடம்.
58 திருக் கழுக் குன்றம், கருணாந்தா மடம்.
59 பிளை மேடு, தபோ வநம், சுந்தராநந்த சாமி மடம்.
60 தஞ்சா வூர், களி மங்கலம, நட ராஜ மூர்த்தி மடம்.
61 பழநி, சாது சாமி ஆசிரமம்.
62 பழநி. பட்டிநச் சாமி மடம்.
63 கரிசல் குளம், ஆறு முக சாமி மடம்.
64 சிவ கங்கை, மௌந சாமி மடம்.
65 செட்டியார் குத்தகை, மொட்டைய சாமி மடம்.
66 குன்றக் குடி, நித்தியாநந்த சாமி மேல மடம்.
67 வே லூர், தோப்பாச் சாமி மடம்.
68 மதுரை, யோகாநந்த சாமி மடம்.
69 அகிலாண்ட புரம், சங்கர சாமி மடம்.
70 குச்சன் ஊர், சோமசுந்தர சாமி மடம்.
71 பொதட்டூர் பேட்டை, செ, அ. வ. மடம்
72 ராம கிருஷ்ணம ராஜு பேட்டை, கந்த சாமி மடம்.
73 காரியான் ஊர், தபோ வநம், நடேச சாமி மடம்.
74 வளவன் ஊர், ஷண்முக சாமி மடம்.
75 ஹரி வெற்றி, சதா சிவ சாமி மடம்.
76 விருத்தாசலம், கணபதி சாமி மடம்.
77 ஆத் தூர், சங்கர நிலையம்.
78 பவாநி, ராம சாமி மடம்.

79 காஞ்சி புரம், திரி வேணி கிரி சாமி மடம்.
80 மழ பாடி, சின்ன மடம்.
81 ஆண்டி யப்பன் காடு, பால் சாமி மடம்.
82 பிள்ளையார் பட்டி, கோவிந்தாந்த சாமி மடம்.
83 மதுரை, பசு மலை விவேகாநந்தா மடம்,
84 இளையான் குடி, சிவாநந்த சாமி மடம்.
85 கல்லல், சாதுக்கள் மடம்.
86 புதுக் குடி, லக்ஷ்மி புரம், சொக்கலிங்க சாமி மடம்.
87 பா லூர், சொருபாநந்த சாமி மடம்.
88 பழ முக்கல் (திண்டிவனம் வழி) ஆறுமுக சாமி மடம்
89 சேலம்-குகை, ராமாசிரமம்,
90 தக் கோலம், சொக்க லிங்க சாமி மடம்.
91 கிருஷ்ண கிரி, அண்ணுமலைச் சாமி மடம்.
92 திரு நெல் வேலி, குறுக்குத் துறை, சிவாநந்த சாமிகள் மடம்.
93 திரு அண்ணுமலை, ரமண ஆசிரமம்.
94 பாடி. சிவப் பிரகாச சாமி மடம்.
95 உத்தர கோச மங்கை, வெள்ளைய சாமி மடம்.
96 கப்பல் ஊர், மடம்.
97 திருப் புரம்பியம், மடம்.
98 உள்ளிக் கோட்டை, மடம்.
99 கலச பாக்கம், மடம்.
100 சுவாமி மலை, மடம்.



4 வது தரங்கம் (சிருஷ்டி)
(உண்டு பண்ணல்.)

1. முக்தி ராம லிங்க ஞான தேசிகர், 2. அருணசல ஞான தேசிகர், 3. பழநி யப்ப ஞான தேசிகர், 4. சிதம்பர ஞான தேசிகர், 5. ராம சாமி ஞான தேசிகர், 6. வீர சேகர ஞான தேசிகர் அறுவரும் கோடி ரூபாய் நகரத்தார்களிடம் ஆர்ஜ்ஜிதம் செய்து, இரு நூறு வருஷம் ஆகக் கோவி லூரில், கொற்ற வா றீசுவரர் ஆலயம், திரு நெல்லை அம் பாள் ஆலயம், கைலாச நாதர், நித்திய கல்யாணி ஆலயம், அணி வெட்டுக் கால் மண்டபம், அஷ்ட சக்தி மண்டபம், சதுஷ் கோண மண்டபம், திருக் குளம் வெள்ளைக் கல் கட்டிடம், படித் துறை, மைய மண்டபம், இரண்டு ரத மண்டபம், ஆர்ஸ் வளைவு, இரு தேர் போன்ற எண் கால் இரு விமானம், பிளாட்பாரங்கள், மடம், அதிஷ்டானம், போசன சாலை, நூற்றுக் கால் மண்டபம், கைலாசக் கொட் டகை, பசு மடம், தெற்கு ஊருணி கற் கட்டிடம், பிள்ளையார் கோவில், தே னுற்றுக்கு மூன்று பாலம் கட் டல், காரைக் குடிக்கும், கோவில் ஊருக்கும், ரோட்டுப் போடல், இரு மருங்கும் தென்னம் பிள்ளை வைத்தல், கோவிலுக்கு நாற் புரமும், அக்கிர ஹாரம், பாட சாலை, பசு மடம், தேர் முட்டி கட்டல், மான கிரிக்கும், கோவி லூருக் கும், ரோட்டுப் போடல், மான கிரியில், பிள்ளையார் கோவில், நெல் களஞ்சியம, விடுதி கட்டல், களத் தூரில், சிவன் கோவில், நெல் களஞ்சியம், மடம் கட்டல, ஓலைக் குடிப் பட்டியில், கோவில், நெல் களஞ்சியம், மடம் கட்டல், சாணுன் ஏந்தலில், பிள்ளையார் கோவில், நெல் களஞ்சியம்,

மடம் கட்டல் முதலியன செய்தார்கள், சிக்கல், பொருள் வைத்த சேரியில், அதிஷ்டாநம், மடம், பசு மடம் கட்டல், திருக் களரில், சிவன் கோவில் கட்டல், திருக் குளம் கட்டல், ஐந்து ரதம் செய்தல், வீர சேகர அதிஷ்டாநம் கட்டல். மடம் கட்டல், 50 வேலி விளை நிலம் வாங்கல், சிதம்பரம் நட ராஜர் கோவிலில், விளக்குப் போடல், நித்தியப் பாவாடை போடல், குன்றுக் குடி, மேல வீதியில், மடம் கட்டல். கோவி லூர், கோவிலுக்கு வெள்ளி ரதம், வெள்ளி வாகநம், வெள்ளி சோடச உபசார பூஜைச் சாமான்கள், தங்க நகை கள், தங்கத் திரு வாபரணம், வெள்ளித் திரு வாபரணம், மர வாகநங்கள், திருக் களர், கோவிலுக்கு, அம்பாள் தங்க அங்கி, சுவாமி வெள்ளித் திரு ஆபரணம், வெள்ளிப் பூசைச் சோடச உபசார சாமான்கள், வெள்ளி வாகநங்கள், மர வாகநங்கள், கோவி லூர், மடத் துக்கு, வெள்ளித் திரு வாபரணங்கள், வெள்ளி பூசைப் பாத்திரங்கள், திருக் களர், மடத்துக்கு, வெள்ளிக் கேடகம், வெள்ளித் திரு ஆபரணம், வெள்ளிப் பூசைச் சாமான்கள், சிக்கல், பொருள் வைத்த சேரி, மடத்துக்கு, அதிஷ்டாநம் கருங் கல்லால் கட்டல். திரு வாபரணம் செய் தல், வெள்ளிப் பூசைச் சாமான் செய்தல், விளை நிலம் வாங்கி வைத்தல், கோவில் ஊர், மடத்துக்கு, களத்தூர் கிராமம், ஓலைக்குடிப்பட்டி கிராமம், மான கிரிக் கிராமம், சாணுன் ஏந்தல் கிராமம், கழநி வாசல் கிராமம் முதலிய வற்றை வாங்கி வைத்தல் முதலியன ஆம்.

இந்த ஐந்து கிராமங்களிலும், 54 படி கொண்ட கலம், வருஷம் ஒன்றுக்குப் பத் தாயிரக் கலம் நெல் வரும். அக் காலம், கலம் ஒன்றுக்கு ரூபாய் இரண்டே தான். இப் போது, கல நெல், அறு பது ரூபா யாக இருக்கிறது இந்தக் கணக்கில் பன் னிரண்டு லக்ஷ ரூபாய் வருமானம் ஆகும்.

5வது தரங்கம். (சிருஷ்டி)
உண்டு பண்ணல்.
மாணவர்களைப் பிரஹ்ம வித்து ஆக்கல்.

1. முக்தி ராம லிங்க ஞாந தேசிகர், 2. அருணுசல ஞாந தேசிகர், 3: பழநி யப்ப ஞாந தேசிகர், 4. சிதம்பர ஞாந தேசிகர், 5. ராம சாமி ஞாந தேசிகர், 6. வீர சேகர ஞாந தேசிகர், 7. அண்ணுமலை ஞாந தேசிகர், 8. மகா தேவ ஞாந தேசிகர், என்னும் எண்மர் காலத்திலும், பத்து லக்ஷம் பேர், இல்லறத்தாரும், துறவறத்தாரும், பிரஹ்ம வித்துக்க ளாய், விதேக கைவல்யம் அடைந்திருக்கின்ருர்கள். ஏனைய நூறு மடங்களில், பத்து லக்ஷம் பேர், இல்லறத்தாரும், துறவறத்தாரும், ஆக இருந்து, சாதந சதுஷ்டயம் உடை யவர்க ளாய், மகா வாக்கிய உபதேசம் கேட்டு, குரு கைங் கர்ய பர ராய், பிரஹ்ம வித் தாய், வித்துவான்க ளாய், சிற் சிலர் நூல் இயற்றும் ஆற்றல் உடையவர் களாய், இருந் தார் கள் என்பது உலகப் பிரசித்தம் ஆன விஷயம். கோவிலூர் மடத்துக் குருபரர் எண்ம ருடைய மாணவர் பலர், வேத மொழி பெயர்ப்பு, சம்ஸ்கிருத நூல் மொழி பெயர்ப்பு, ஹிந்தி பாஷை நூல் மொழி பெயர்ப்பு, தமிழில் நூல் இயற்றல், உரை இயற்றல், செய்யுட் செய்தல், ஸ்தோத்திரக் கவி செய்தல், பிரசங்கம் செய்தல், வாத விவாதம் செய்தல், முதலிய ஆற்றல் உடையவர்க ளாய், உலகம் போற்றும் படி யாக இருந்தார்கள் என்பது. அவர்கள் எழுதி இது வரை பிரசித்தம் ஆக விளங்கிக் கொண்டு இருக்கின்ற நூல் கொண்டே உணர லாம்.

5வது தரங்கம். (ஸ்திதி)
(காத்தல்)

1. முக்தி ராம லிங்க ஞாந தேசிகர், 2. அருணுசல ஞாந தேசிகர். 3. பழநி யப்ப ஞாந தேசிகர், 4 சிதம்பர

ஞாந தேசிகர் 5 ராம சாமி ஞாந தேசிகர், 6 வீர சேகர ஞாந தேசிகர், ஆகிய அறுவர் உண்டு பண்ணிய, ஆலயம், மடம், நிலம் முதலியவற்றை 1. அண்ணுமலை, ஞாந தேசிகரும், 2. மகா தேவ ஞாந தேசிகரும், தாங்கள் உள்ள வரை, பூஜை முதலிய காரியங்களை சிறப்புற நடாத்தியும். விளை நிலங்களை விருத்தி பண்ணியும், சாதுக்களைச் செவ்வனே கவனித்தும், சாதுக்கள் போஜநத்தினைச் சிறப்புறச் செய்தும், நாள் தவருது வேதாந்த பாடம் நடத்தியும், சிவாலய, குரு ஆலய, தெரிசநம் செய்தும். உலகம் புகழ நடத்திக் கொண் டிருந்தார்கள்.

அண்ணுமலை ஞாந தேசிகர் காலம் எட்டு வருஷம் வரையும், தாங்ய ரேகை மிகுதி யாக உடையவர்கள் ஆகலின், அதிக நெல் விளைந்து வந்து, முந்தின நெற் களஞ்சியம் கொள்ளாமல், அதிகம் ஆக இருந்த நெற்களைக், குரு பூசைக் கட்டில் புதிய களஞ்சியங்களை ஏற்படுத்திச் சேமித்து வைத்துத் தேவை யுள்ள சமயம் உபயோகப் படுத்தி வந்தார்கள். அதிக வருவாயால் லக்ஷக்கணக் கான ருபாய்கள் சேமித்து வைத் திருந்தார்கள், அண்ணுமலை ஞாந தேசிகர் அவர்கள் என்றும்,

தன் சகாபாடி யாகிய, சுப்பய்ய சுவாமிகள், காசிகாநந்த சுவாமிகளை, வித்துவான்க ளாகக் கருதிக் கௌரவித்து வந்தார்கள் என்றும், அறிய வேண்டும்.

பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபைக்கு வந்த வித்துவான்களுக் கெல்லாம், தகுதி யான சன்மாநம் செய்து, சால்வை போர்த்தி, உலகம் போற்றச் சந்தோஷம் ஆக அநுப்பிஞர்கள்.

பிரஹ்ம வித்தியாப் பிரசாரண சபையால், உலகம் எல்லாம் கொண்டாடும்படி, வாத விவாதங்கள் நடாத்தி, கோவி லூர், மடத்தின் பெருமையையும், அத்வைதத்தின் பெருமையையும், உலகம் உள் ளளவும், மங்காதும், மறக்காதும், இருக்கும்படி, அண்ணுமலை ஞாந தேசிகர் அவர்கள் செய்தார்கள். லைப்ரெரியில் ஏராள மான சம்ஸ்கிருத நூல் களை வாங்கி வைத்தல் செய்தார்கள். அவர்கள் இருந்த, எட்டு வருஷமும், சாதுக்களுக்குக் காலைப் பலகாரம், மதிய உணவு, இடைவேளை பலகாரம், இரவு உணவு, முதலியன யதேஷ்ட மாகச் செய்தார்கள்.

வீரசேகர ஞாந தேசிகர் இருந்த, இரு பத் தேழு வருஷமும், ரக்தாம்பரி சந்யாசிகள், நூறு பெயரும், சுவேதாம்பரி துறவிகள், இல் லறத்தார், நூற்றுவரும் ஆக இருந்து உணவு அருந்தினதைக் கடவுளே பார்த்து ஆநந்த பாஷ்பம் சொறிந்தார் என்ருல், மற்றையோர்கள் பார்த்து ஆநந்தக் கூத் தாடினுர்கள் என்பது மிகை ஆகாது. அவர்கள், காலத்தில், நெய், தண் ணீர் போல் உபயோகப்படுத்தப்பட்டது. வீர சேகர ஞாந தேசிகர் காலத்தில், கோவி லூருக்கு இருமுறை வந்த, சிருங்க கிரி, சாரதா பீட வாசி, ஜகத் குரு, ஸ்ரீ சச்சிதாநந்த சிவ அபி நவ நரசிஹ்ம பாரதி சுவாமிகளவர்கள், ஆயிரம் துறவிகளை, ஏக காலத்தில் பார்த்து, விஸ்மயம் அடைந்தார்கள் ஆயிரக் கணக் கான சந்யாசிகளை, வட நாட்டில், பிரயாகை, கும்ப மேளா, அரித் துவார மேளாக்களில், நாநா வித வேஷத்தோடு, பார்க்கலாமே அன்றி, ஒரே மாதிரி, ஒரே தன்மை, ஒரே படி தான, காஷாயம், முண்டிதர்கள், கோவி லூரில் உள்ள மடத்தார் போன்று, இருக்க மாட்டார்கள். நாம் பிரயாகைக்கு இரு

முறையும், அரித் துவாரத்துக்கு ஒரு முறையும், மேளா வுக்குப் போய்ப் பார்த்திருக்கிறோம்,

தென் னுட்டில், கும்ப கோணத்தில், பன் னிரண்டு வருஷத்துக்கு, ஒரு முறை நடக்கும் மகா மகா விழாவுக்கு, நாம் நான்கு முறை போயிருக்கிறோம். அங்குச் சனக்கூட் டம் அதிகமே அன்றி, பிரஹ்ம வித்துக்க ளான சங்யாசிகள் கூட்டம் அதிகம் இல்லை.

கோவி லூரில், இரு நூறு வருஷம் ஆக, கோடிக் கணக் கான, முமுக்ஷுக்கள் வந்து, தங்கி யிருந்து, பாடம் கேட்டு, மகா வாக்கிய உபதேசம் கேட்டுப் போயிருக்கின் ருர்கள் எனக் கூறுவது மிகை ஆகாது.

கோவி லூர் மடத்தில், ஒரு நாள் இரு பத்து நான்கு மணி நேரத்துக்கும், அதாவது, ஒரு நாள் அறு பது நாளி கைக்கும், வகுத்து நடந்து வரும், முறை யாகிய, சாதந சாத்திய முறை, கோவி லூர் மடத்தினையும், அதனைச் சார்ந்த மடங்களிலும் தவிர, வேறு எந்த மடத்திலும், வேதாந்த மடத்திலும், சைவ சித்தாந்த மடங்களிலும், தென் கலை, வட கலை, வைஷ்ணவ மடங்களிலும், அநுஷ்டிப்ப தில்லை என்று நிச்சயம் ஆகக் கூறலாம். சட்டப் புத்தகத்தில், இருப்பது போல, கோவி லூர் மடத்தில் தான், அநுஷ்டா நத்தில் இருந்து வருகிறது. இதனை யாம் அறு பத்து நான்கு வருஷ மாக, நேரில் பார்த்தும், அநுஷ்டித்தும், வருகின் ருேம்.

அதனுல் தான், "கோவி லூர் மடத்துச் சாமியார்கள்" என்று, உலகத்தோர், வேறு பிரித்துக் கூறுகின்ருர்கள், சொல், செயல், நடை, உடை, பாவனை, எல்லாம் அவர்க

ளிடத்து ஒரே மாதிரி யாகச், சிப்பாய்கள் போன்று, இருப் பதனால் தான், உலக மாந்தர்கள். "கோவி லூர் சாமியார் கள்" என்று, வேறு படுத்திக் கூறுகின்றார்கள். ஆயிரத்து இரு நூறு வருஷம் ஆக ஏற்பட்ட அத்வைத மடத்தில் கூட, இவ் வளவு மாணவர்கள் வந்து, தெய்வ கதி, விவேக கதி, விரக்தி கதியால் அன்றி, வந்து, சரணுகதி அடைந்து, பிரஹ்ம ஞானிகளிடம், பிரஹ்ம வித்தியா உபதேசம் கேட் டார்கள் என்று சொல்ல முடியாது. அவர்கள், பன் னிரண்டு வருஷம் பரிக்ஷித்து, ஒரு சிஷ்யனுக்கு மட்டும், பிரஹ்ம உபதேசம் செய்வார்கள்.

மற்றவர்கட்கு, கர்மம், பக்தி, உபாசனை, குடும்ப செள கரியம், அரோகம், முதலியவற்றை, உபதேசித்து வருகிறார் கள். அந்தக் கூட்டம் தான், அதிகம் வந்து போவ துண்டு. ஜெந்ம நிவிர்த்தியை விரும்பி, வருவா ராகிய ஆண்களும், பெண்களும், இல்லை. உபதேசிப்பவரும் இல்லை. கோவி லூர் மடம் போன்று, பூ லோகத்தில், நூறு மடங்கள் இருந்து, விவேக கதி, விரக்தி கதி, தெய்வ கதியில் வரும், பக்குவி கட்கு உபதேசிக்கப்படும் ஆயின், எல்லாரும், இது வரை மோக்ஷம் அடைந்து, தேகத் திரய நிவிர்த்தியானதால், பிரஹ் மா, விஷ்ணு, ருத்திரர், மகேசுவரர், சதா சிவர் என்னும் ஐவரும், ஓய்வு பெற்றுத், தனது ஸ்வரூப ஸ்திதியில், இருந் திருப்பார்கள் என்பதை உணர வேண்டும், அதற்கு, நிர பேக்ஷக் கிருபையும், இரக்கமும். வேண்டும். அது, எல் லாப் பெரியோருக்கும், அமைவ தில்லை. காரணம், தேக ஆவிர்ப்பாவ கர்மம், நாநா விதம் ஆம். அதனால், ஒரு படித் தாக இருக்கமாட்டாது, ஞானிகள், நாநாப் பிரகாரம் ஆக இருப்பார்கள். என்பதனை,

உலகிறந்த சீவன்முக்தன் நுகர்வினைவா தனையால்
உண்பொருள்கள் பலகவர்ந்தும் மௌனமே உற்றும்,
பலதிறங்கள் மொழிந்தும்உப தேசநெறி புரிந்தும்
பரிதபித்தும் மகிழ்ந்துமிகு வேடங்கள் புனைந்தும்,
கலைதுறந்தும் உடைஉடுத்தும் கல்விபல பயின்றும்
கல்லாது மாதர்முயக் கிடையுற்றும் இவ்வாறு,
அலகிறந்த நடைஉறினும் அருள்விளையாட் டென்றே
அவன்தனைநம் புகஜயம் ஒருசிறிதும் உறுமல். (178)

என்று வேதாந்த சூடாமணி 178 நூற்று எழு பத்தெட்டாவது கவி வலியுறுத்துதல் கொண்டும்,

அஞ்ஞ வதைப் பரணி 11 உட் பரிவாரம்.

14 பொருளைவி ரிப்பார் புகழுதி றத்தார்
புளகிதம் உற்றார் புரளுதல் உற்றார்,
அருளைவி ரிப்பார் அறியவு ரைப்பார்
அதிசயம் மிக்கார் அவள்அடி யாரே.

15 தெரியும்உ ளத்தார் சிலவர்தெ ளிப்பார்
சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பார்,
அளியும்உ ளத்தோ டழுதுசி ரிப்பார்
அவர்கள்செ யப்பா டறியவொ ணுதே.

என்று கூறுதல் கொண்டும், உணரல் வேண்டும்.

சுபம் அஸ்து.



7வது தரங்கம். (அலை—அத்தியாயம்)

அத்வைதத்தை எங்கும் விருத்தி பண்ணுதலும்,
தென்னுடு பூராப் பரப்புதலும்,

"பிரஞ் ஞாநம் பிரஹ்மம்", "அயம் ஆத்மா பிரஹ்மம்" "தத் த்வம் அசி" 'அஹம் பிரஹ்ம அஸ்மி" என மகா வாக்கியங்கள், நான்கு வேதத்திலும், நான்கு உள்ளன. அவற்றுள், 'பிரஞ் ஞாநம் பிரஹ்மம், அயம் ஆத்மா பிரஹ்மம், என்ப திரண்டு வாக்கியமும், படர்க்கையில் உள்ளன.' "அஹம் பிரஹ்மாஸ்மி" என்பது, அநுசந்தாந வாக்கியம், தன்மையில் உள்ளது. "தத் த்வம் அசி". அது நீ ஆய் இருக்கின்ருய், என்பது தான், முந் நிலை வாக்கியம், குரு சிஷ்யனுக்கு உபதேசிக்கும் மகா வாச்கியம் ஆகும். இதனை குரு உபதேசிக்கும் போது, சிஷ்யன் உத்தம அதிகாரி யாக இருப்பின், சம்சய விபரீதம் இன்றி, "நான் பிரஹ்மம்", அதாவது, "தேகத் திரய விலக்ஷண ஜீவ அதிஷடானப் பிரத்தியக் ஆத்மா வாகிய நான், சர்வ வியாபகப் பிரஹ்ம சைதந்யம் ஆகின்றேன்"என்று ஞாநம் உண்டாகின்றது. மத்திம அதிகாரி யாக இருப்பின்,சம்சயம் விபரீதம் உடைமையான், ஷட் வித, லிங்க வேத தாத்பரிய சிரவண மாகிய பிரமாண கத சம்சய நிவாரணம், பிரமேயகத சம்சய நிவாரணம் செய்து, தேக ஆத்ம புத்தி ஆகிய, விபரீத பாவனையினை, "நாம் தேகம் அல்ல", "நாம் பிரஹ்மம்" என்னும் நிதித்தியாசநத்தைப் பல முறை கோடிக் கனக் காகச் செய்தலால், நிவாரணம் செய்யும்படி செய்து,பிரஹ்ம ஞாநி ஆக்க வேண்டியது. அதம அதிகாரி யாயின், கர்மம் பக்தி பிரதீக உபாசனைகளை உபதேசித்து, மனோ மலத்தினைப் போக்கி, மந்தத் தன்மை நிவாரணம் ஆயிற்ரு என்று சோதித்து, வைகுண்

டம், கைலாசம். பிரஹ்ம லோகம், இந்திர லோக, ஆசை கள், நீங்கி விட்டதா என்று பரீக்ஷித்து, பின்னர், "தத் த்வம் அசி" மகா வாக்கியத்தினை உபதேசித்துப், பிரஹ்ம வித்து ஆக்க வேண்டும். இதற்குச், சாதி வர்ண ஆச்சிரமம் வயது ஆண் பெண் என்ற முறைமைக்கு அவசியம் இல்லை. தேவர்கட்கு, ஜாதி வர்ண ஆசிரம வயது ஆண் பெண் என்ற முறைமை இல்லை. அது போலவே, தேவத் தன்மை, அதாவது, பிரஹ்மத் தன்மை, அடையும் மநிதனுக்கு,ஜாதி வர்ண ஆச்சிரம வயது ஆண் பெண் முறைமை தேவை இல்லை. உத்தம அதிகாரியா? மத்திம அதிகாரியா? அதம அதிகாரியா, அல்லது, அநதிகாரியா என்று பரீக்ஷிக்க வேண் டியது அவசியம். பிராஹ்மணரிலும், பெரும்பாலும், அதி காரி யாகி வராமையினால், தேக ஆத்ம புத்தி யுடையவர் களாய், சாஸ்திரம் படித்த பண்டிதர்கள் பலர் இருக்கின்ற னர். க்ஷத்திரிய வைசிய சூத்திர பஞ்சம சண்டாள ஜாதி களில். ஆண் பெண் பலர், அதிகாரி யாய் தேகாத்மப் பிராந்தி நீங்கினவர்க ளாய், பிரஹ்ம ஆத்ம ஞாநம் உடை யவர்கள் ஆய், லக்ஷக் கணக் கானவர்கள் இருக்கின்றனர் எனக் கூறல் மிகை ஆகாது.

பிராஹ்மணர்கட்கு, ஜாதி அபிமாநம் விடுதல் அதிகப் பிரயாச மாகும். க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர், பஞ்சமர், ஆண் பெண்களுக்குச் சாதி அபிமாநம் விடுதல் சுலபம் ஆம். அதனால் தான், பிராஹ்மணர்களில், பிரஹ்ம வித்துக் கள், ஸ்வல்பம் ஆயும், ஏனைய ஜாதிப் பிரஹ்ம வித்துக்கள் அதிகம் ஆகியும், இருக்கின்றனர். இதனை யாம் மட்டும் கூற வில்லை. உபநிஷதங்களும், புராணங்களும், ஸ்மிருதி களும், கூறுகின்றன.

அதனுல் தான், உலகிலே, பிராஹ்மண மடங்கள், சுருங்கியும் க்ஷத்திரிய, வைசிய மடங்கள், அதிகரித்தும், அதிகாரிகளும், உபதேஷ்டாக்களும், அதிகரித்தும், விளங்குகின்றனர்.

மந்திர உபதேசம் ஆகிய பிரணவம், பஞ்சாக்ஷரம், ஷடாக்ஷரம், அஷ்டாக்ஷரம், சதுர் தச அக்ஷரம், (சந்தியாவந்தந மந்திரம்) முதலியவற்றை உபதேசிப்பதற்கு, ஜாதி, வர்ண, ஆச்சிரமம், ஆண், பெண், கால, தேச, வர்த்தமாநம், தக்ஷிணை, பிரதிப் பிரபோசநம், முதலியவற்றைக் கவனிக்க வேண்டும். நித்தியக் கங்காஜல ஸ்நாநத்துக்குக், கால நியமம் பார்க்க வேண்டிய தில்லாதது போல, நித்திய பிரஹ்ம ஆத்ம, 'தன் யதார்த்த ஸ்வரூபத்தினைச்' சிந்திக்கவோ. உபதேசிக்கவோ, கார் கால மேகம் போலும், கோடை கால மேகம் போலும், வருஷா கால, ஐப்பசி மாத, கார்த்திகை மாத, மழை போலும், கால தேச வர்த்தமாநங்கள் தேவை இல்லை என்று உணர வேண்டும்.

மார்க்கட்டில் சாமான் வாங்கப் போகும் போது, வழி முதலியவற்றின் சுத்த அசுத்தம் பார்த்துக் கொண்டிருந்தால், எப்படிச் சாமான் வாங்க முடியாதோ, அது போல, அவர் அவர்கள், எதார்த்த ஸ்வரூபத்தினை அறிவதற்கும், உபதேசிப்பதற்கும், ஜாதி, வர்ண, ஆச்சிரமம், ஆண், பெண், காலை, மாலை, பகல், இரவு, என்பவற்றைப் பார்த்துக் கொண்டிருந்தால், சமயம் வாய்க்காது, ஆயுளும் போய் விடும்.

இதனை அடியில் வரும்:-

''அம்புவி மாந்தர் கெல்லாம் ஆயுளோ சிறித தற்குள்,
வெம்பிணி இளமை மூப்பு விழிதுயில் சோம்பல் காதல்,

கம்பலே நீக்கி நன்ருக் கற்பதெங் ஙனம்கற் ருலும்,
தன்புலன் சிறிது ஞாந சாகரம் பெரிதென் றுன்னி.''

என்னும், செய்யுள் கூறுகிறபடி, சார மான ஆத்ம சொரு பத்தினே ஒவ் வொரு ஜீவனும் அறிய உரிமை உடையவன் ஆகின்ருன்.

பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்ர, பஞ்சமத் தன்மைகள், கர்மத்தால் வந்தது. அது போல், ஆண், பெண் தன்மையும், கர்மத்தால் வந்தது. இவை யாவும், தூல சரீரத்தில் இருக்கிறதே அன்றி, சூக்ஷ்ம சரீரம், காரண சரீரம், சீவ சேதநங்களில் இன் ரும் என உணர வேண்டும்.

தனது யதார்த்த நிலே யான சாத்தியத்தினே அடை வதற்குச். சா தநம் வேண்டுமே அன்றி, புறப் புறச் சாதநம் ஆன, சரீரமும், அதன் புறம் பான, ஜாதி வர்ண ஆச்சிர மங்களும், அந்தச் செந்மாவில் வேண்டுவ தில்லே என்ப தனே ஆழ்ந்து யோஜிக்க வேண்டும்.

இதனுல் தான், 1. கோவி லூர் மடத்திலும், அதனேச் சார்ந்த, 2. திருக் களர், கோ. ஆ. வீர சேகர ஞாந தேசிகர் மடம், 3. திரு அண்ணுமலே கந்தப்ப ஞாந தேசிக ஈசாங்ய மடம். 4. மதுரை, தெற்கு வெளி வீதி, குட்டைய சுவாமிகள் மடம். 5. சிதம்பரம், பொன்னம் பல சுவாமிகள் மடம், 6. சிக்கல் பொருள் வைத்த சேரி, உகந்த லிங்க ஞாந தேசிக சுவாமிகள் மடம், 7. மதுரை, தெற்கு வாசல், பிரஹ்மாநந்த சாமிகள் மடம். 8. திரு வா ரூர், மடப் புரம், தக்ஷிணு மூர்த்தி சுவாமிகள் மடம், 9. சிதம்பரம், மௌந சாமிகள் மடம், 10. மதுராஸ்-சூலே, வீர, சுப்பய்ய ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம்,

11. மாஞ மதுரை, நாராயண சாமி மடம். 12. கோவில் பட்டி முக்தாநந்த சாமி மடம், 13 தஞ்சா வூர், கரந் தட்டான் குடி, பால் சாமி மடம், 14. திருப் பூ வணம், காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் மடம். 15. காளையார் கோவில், செல்லப்ப ஞாந தேசிக ஸ்வாமிகள் மடம். 16. மழ பாடி ஸ்வயம்பிரகாச சுவாமிகள் மடம். முதலியனவும், இது போன்ற, இன்னும் 84 மடங்களிலும், பிரஹ்ம வித்தையினை உபதேசம் செய்து, இரு நூறு வருஷம் ஆக, லக்ஷக் கணக் கானவர்கள், மாணவர்க ளாக வந்து, பிரஹ்ம உபதேசம் கேட்டுப், பிரஹ்ம வித்துக்கள் ஆகி யிருக்கின் றனர்,

இதில், சிலர், சகாம, நிஷ்காம, தவம் இரண்டும் உடையவர்க ளாய் இருந்தனர். பலர் நிஷ்காம தவம் ஒன்றையே உடையவர்க ளாய் இருந்தனர். அதனால், தான், இரு தவம் உடைய 'பெரியார், சாபாநுக்கிரக சாமர்த்தியமும், அஷ்ட மகா சித்தியும், பிரஹ்ம ஞாநமும், உடையவர்க ளாயும் இருந்தனர். நிஷ்காம தவம் ஒன்றையே உடைய பெரியார், பிரஹ்ம ஞாநம் மட்டும் உடையவர்களாய் இருந்தனர் என உணர வேண்டும்.

---

இரு தவம் உடையவர்கள், சிருங்க கிரி, சங்கராநந்த சுவாமிகள், நெரூர், சதா சிவப் பிரஹ்மேந்திர சரஸ்வதி சுவாமிகள். கும்ப கோணம். மௌந சாமிகள், திரு அண்ணாமலை, ஈசாந்ய மடம், கந்தப்ப ஞாந தேசிக சுவாமிகள், திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணா மூர்த்தி சுவாமிகள், திருக் களர், வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள், போன்றவர்கள் ஆவார்கள். சகாம தவம் கடிநம் ஆனதால், சில

பெயருக்குத் தான் அநுஷ்டிக்க முடியும். நிஷ்காம தவம் சுலபம் ஆனபடியால், எல்லாராலும் அநுஷ்டித்து அடைய முடியும். ரிஜு மார்க்கமும் ஆகும். அதாவது, நேர் வழியும் ஆகும். இதனை வேதாந்த சூடாமணி 176 கவி

"வாதரா யணன்முதலோர் பேரற்சாபம் உடனே
மற்றருள்செய் வலிஉடையோன் தததுவஞா
நத்தோன்,
ஏதிலான் அலன்எனில்அவ் வலிதவத்தின் பலம்ஆம்
இலங்குதத் துவஞாந பலம்அன்றும் ஆயின்,
மாதவமே ஞாநத்திற் கேதுவெனும் சுருதி
வழக்கினுல் தவம்இலர்க்குத் தத்துவஞா நம்தான்,
ஏதெனில்ஆம் சாபாதிக் குச்சாகா மியமே
ஏதுநிட்கா மியதவம்ஞா நத்தினுக்கென் றறியே."
176

"வேதவியா சாதிகட்கு ஞாநம்வலி இரண்டும்
மேவுமே எனில்அவர்கட் கிருதவமும் உளஆம்,
ஆதலினுல் அவ்விரண்டும் ஆகும்ஒரோர் தவமே
ஆயின்ஒவ்வொன் றேஅடையும் அதனுன்மா
றின்றும்."
என்று கூறுவது கொண்டும் உணரல் ஆம். ?77 கவி

---

## முடிவுரை.

பூலோகத்தில், தென்னுட்டில் கோவிலூர் மடமும், அதனைச் சார்ந்த நூறு மடங்களிலும், சாதந சகித சாத்திய அநுஷ்டாநம் நடப்பது போல், வேறு எங்கும் நடப்பதில்லை. தென்னுட்டில், விவேகாநந்த மடத்தில், அவுடதப் பணியோடு, வித்தை படிக்கச் செய்து, அதனேடு வேதாந்த உபதேசம் சிலருக்குச் செய்து வருகிருர்கள். அவர்கள்

ஐந்து, ஆறு, ஏழு பூமிகளை முக்கியம் ஆக அங்கீகரிப்ப தில்லை. நாலாம் பூமியைத் தான் பிரதானம் ஆகக் கொள்ளு கின்றனர்:

கோவிலூர் மடத்தினை அநுசரித்த மடங்களில், ஏழு பூமிகளும் அங்கீகரித்து, 1. சுபேச்சை, 2. விசாரணை, 3. தநுமாநசி. 4. சத்துவாபத்தி, 5. அசம்சக்தி, 6. பதார்த் தாபாவனை, 7. துரியகா என்னும், ஏழு பூமிகளின் அப்யா சங்களும், செய்து வந்து, அசம் சக்தி, பதார்த்த அபாவனை, துரியகா என்னும் மூன்று பூமிகளைச், சிற் சில தபசிகளும், சத்வாபத்தி என்னும் நாலாம் பூமியினை, லக்ஷக் கணக்கான சந்நியாசிகளும், இல் லறத்தாரும், அநுஷ்டித்து, அப்பிரதி பந்த அபரோக்ஷ சாக்ஷாத்கார பிரஹ்ம ஞாநத்தினை அடைந்து, பிரஹ்ம வித்துக்க ளாய் இருந்தனர், இருக்கின் றனர். இனியும், இருப்பார்கள் என்று சொல்வது மிகை ஆகாது.

இவ் வாறு, அநாயாசம் ஆக, பிரதிப் பிரயோசநம் கருதாது, மேக வருஷம் போல், உபதேசித்து, சிரமம் கரு தாது, அப்யாசப் பழக்கத்துச்கு கொண்டு வந்து, இருந்து கொண்டு இருப்பது, ஜீவர்கள் மீது வைத்த அபூர்வ கருணையினுலேயே ஆகும். இரு நூறு வருஷம் ஆக, இவ் வாறு நடந்து வருகிறது என்பது, உலகப் பிரசித்தம் ஆன விஷயம்.

இவ் வாறே, இனி மேலும், நூறு மடங்களிலும், பிரஹ்ம வித்துக்கள் உண்டாகிக் கொண் டிருக்க வேண் டும் என்று, மந மொழி மெய்களால், சிவன், விஷ்ணு, பிரஹ்மா, முதலியவர்களைப் பிரார்த்திக்கின்றேன்.

அருமையாம் வீர சேகரன் அடியை
அகத்தினில் இருத்தியே ஜீவர்,

பெருமையாம் பிரம வித்துக்கள் ஆகிப்
பெரியமா தவத்தினை அடைந்து,
உரிமையாய் உலகர் போற்றுமா றிருந்து
உம்பர்தொழத் தக்கதா வாழ்ந்து,
மறுமையில் லாமல் செய்தனன் காசி
காந்த மாமுநி வனனே.

---

பொங்கும் மங்கலம் எங்கும் தங்குக.

சுபம் அஸ்து.

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் திரு அடிகளே சரணம்.

கோவி லூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம்
முற்றுப் பெற்றது.

சர்வம் சிந் மயம்.

---

| பக்கம் | வரிசை | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 26 | னுக்குபன் | னுக்குப்பன் |
| 8 | 15 | விமுக்குதா | விமுக்தா |
| 12 | 23 | புத்புதம்(அலை) | புத்புதம் (குமிழி) |
| | 24 | பிரஹ்மா | 1. பிரஹ்மா |
| 34 | 8 | வருஷம் | சர்வ சித்து வருஷம் |
| | | மாதம் | ஆனி மாதம் |
| | 9 | வருஷம் | 28 வருஷம் |
| | 10 | ஞு | சர்வ சித்து ஞு |
| | 11 | மீ | ஆனி மீ |
| | | தேதி | 12 தேதி |
| | 12 | கிழமை | வியாழக் கிழமை |
| | | நக்ஷத்திரம் | நவமி திதி |
| | | | அஸ்த நக்ஷத்திரம் |
| 35 | 13 | ஞு | சர்வ ஜித் ஞு |
| | | மீ | ஆனி மீ |
| | | ௳ | 12௳ |
| | | கிழமை | வியாழக் கிழமை |
| 43 | 26 | 5வது | 6வது |

| | | |
|---|---|---|
| 28 | சப்ததா சப்ததி: தோத்திர ரச மஞ்சரி கவி 70 நுந்தா ஒளி உரை | 0 50 |
| 29 | விம்சதிஸ்தோத்திர ரசமஞ்சரி கவி 20 மேற்படிஉரை | 0 25 |
| 30 | மந்திர உபதேசம் வசநம் | 0 25 |
| 31 | வட நாட்டில் அரித் துவாரக் கும்ப மேளாவும், தென் னாட்டில் சாதுக்கள் மேளாவும் வசநம். சாது சங்க நிறுவல் விழா வைபவம் 0 50 [வசநம் | 0 13 |
| 32 | மடங்களின் உத்பத்தியும், தற்போ துள்ள நிலைமையும், | |
| 33 | அதிஷ்டாநத்தில் இருப்பவர்கட்கும், அத்வைதிகட்கும், ஓர் அறிக்கை | 0 25 |
| 34 | ஒன்பது துறவியர் பாடிய அருட்பா மாலை கவி 280 | 1 00 |
| 35 | திருக் களர், வீர சேகர ஞாந தேசிகர் சரிதம் வசநம் | 1 00 |
| 36 | காசிகாநந்த விஜயம் வசநம் | 0 25 |
| 37 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி கவி (62) | 0 50 |
| 38 | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9) சேர்ந்தது | 3 00 |
| 39 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் விவேக சூடாமணி கவி 671, அஞ்ஞ வதைப் பரணி கவி 494, பஞ்ச தசி கவி 796 (3)சேர்ந்ததுகவி (1961) | 3 00 |
| 40 | கீதாத் திரயம் ஈசுவர கீதை கவி 338, பகவற் கீதை கவி 545, பிரஹ்ம கீதை கவி 547 மூன்று சேர்ந்தது (கவி 1430) | 3 00 |
| 41 | வாசிட்டம் கவி (2055) | 2 50 |
| 42 | வேதாந்த சூடாமணி சந்தோஷ தாயிநி உரை | 5 00 |
| 43 | கைவல்ய நவநீதம் பத சார உரை | 3 50 |
| 44 | கைவல்ய நவ நீதம் கிருத பாந உரை | 3 00 |
| 45 | கைவல்ய நவநீத ஆராய்ச்சி | 0 50 |
| 46 | சதுர்த் தச வித்யாப் பிரகாசிகை | 0 50 |
| 47 | சூட்டுக் கோல், கட்டாரி, புச்சம், கண்டநம். வசநம் | 1 00 |
| 48 | கோவிலூர் மடத்தின், அத்புத மகிமா அகூபாரம் | 0 75 |
| 1 | பிரஹ்ம கீதை கவி 547, | 0 38 |
| 2 | ஈசுவர கீதை கவி 338, | 0 25 |
| 3 | பகவற் கீதை கவி 545, 1 25. 4 பஞ்ச தசி கவி 796 | 0 62 |
| 5 | கைவல்ய நவநீதம் கவி 288 | 0 56 |
| 6 | பக்தி சதக தோத்திரம்-தோத்திரப் பிரகாச உரை | 0 19 |
| 7 | திரு எம் பாவை-திருப் பள்ளி எழுச்சி பத உரை | 0 25 |

## கிடைக்கு மிடம்:—

1 சென்னை, வியாசர் பாடி, சிவப் பிரகாச சுவாமிகள் மடம்.

2 சென்னை, சூளை, வீர. சுப்பய்ய ஸ்வாமிகள் மடம்.

3 திருக் களர், கோ. ஆ. வீர மடம்.

4 திரு வாரூர், மடப் புரம், தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடம்.

5 சிதம்பரம், மௌன சாமிகள் மடம்

6 வேதாரணியம், சாதுக்கள் மடம்

7 திருப் பூ வணம், வேதாந்த மடம்.

8 தஞ்சாவூர், கரந்தட்டான் குடி, பால் சாமிகள் மடம்.

9 மதுரை, பிரஹ்மாநந்த சாமிகள் மடம்.

10 திரு அண்ணாமலை, ஈசாந்ய மடம்.

11 ஆத்தூர், வேணுகோபால சாமி மடம்.

12 மதுரை, வடக்குச் சித்திரை வீதி, இமா. கோபால் புக் டிப்போ.

13 திரிச்சி, கோட்டை வாசல், கோபால் புக் டிப்போ.

14 குடியாத்தம், வேதாந்த தமிழ் வாசக சாலை.

15 சேலம், குகை - புலி குத்தித் தெரு,
T. P. ராம சாமி செட்டியார்.



மெய்யப்ப சுவாமிகள்

பொருள் வைத்த சேரி மடம், சிக்கல்.



திருக் களர், அமிர்த வல்லி அம்பா சமேத பாரிஜாத வநேசுவரர்,
வெள்ளி. ரிஷப வாகந ஆருடராய் எழுந்தருளி வந்து.
வீர சேகர ஞாந தேசிகருக்கு மோக்ஷம் கொடுக்கும் சமயம்
பிலவ வருஷம் வைகாசி மாதம் 16ௗ திங்கட்கிழமை
(29—5—1961) இரவு 12 மணிக்கு பிடித்த படம்.



V. R. S. ஷண்முகாநந்த சுவாமிகள் — திருவாரூர்.



திருப் பூ வணம், ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், தலைமையில், 14—2—1956
திருக் களர், அருணசல சுவாமிகள், மோக்ஷ தீபத் தன்று, 56 பெயர் இருந்து, எடுத்த படம்.